உ

"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

*Seek Truth wherever you can find it. But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

"**Hitch your Wagon to a Star.**" "**To Thine Own Self be True.**"




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**


புத்தகம் 14.] 1906-ம்ஸு பிப்ரவரிமீ. [சஞ்சிகை 10.


# "THE WAR OF THE FLESH AND THE SPIRIT."

"The flesh it profiteth nothing, it is the spirit that quickeneth."

## "மஹிஷாஸுரமர்த்தனம்."

"துர்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீ தேவீ
மஹிஷாஸுரமர்த்தநீ ஜய/
வித்யாலக்ஷ்மீப்ராஹஸ்பதீம் வந்தே
அத்தியாத்மிகசாந்தநீபுவ/
வித்தியாரம்பதினேவிஜயதசமியாம்
ஹே அமிர்ததேதுவாம்வந்தேதுஸர்வதா||

" தூராதி தூரஞ் சொல்லத் தொலையாது
பாராப்பராபரம்பார்."—ஔவை குறள்.

"இப்பிரபஞ்சமே துவந்துவ ஸ்வரூபமானது"—என்றால், எதுவும் இரண்டாகப் பிரிந்து ஒன்றுக்கொன்று நேரெதிராக நிற்கும் ஸ்வபாவமுள்ள சக்தி ரூபங்களாலானது என்பது பொருளாம். நலம்-தீது; இன்பம்-துன்பம்; சுகம்-துக்கம்; பிறப்பு-இறப்பு; விருத்தி-க்ஷயம்; உற்பத்தி-லயம்; பெந்தம்-மோக்ஷம்; ஆண்-பெண்; சீதளம்-உஷ்ணம்; ஒளி-இருள்; இப்படி வளர்த்திக்கொண்டு போகலாம். இப்படி இரட்டை இரட்டையாக ஜோடி பிரியும் பொருள்களை உள்வறிந்து ஊன்றிப் பார்த்தால் அவற்றின் ஸ்வபாவம் உண்மையில்

உள்ளபடி இரண்டல்ல; ஆனால் ஏகவஸ்துவாயுள்ள ஒன்றின் இருமுனைகள் என்று தெரிய வரும். ஒரு குச்சியை யெடுத்தால் 'குச்சி' ஒன்றானாலும் அதன் முனைகள் இரண்டாகவே யிருக்கிறது. இந்த இரண்டு முனைகள் எல்லாவற்றிற்குமேயுண்டு. காணுதற் கரிதாம கால த்திற்கும் இப்படிப்பட்ட முனைகளிரண்டுண்டு. அவை: "ஆதி-அந்தம்"; தேசபரிச்சின்னமான வஸ்துவுக்கும் "அடி-முடி" யென்றிரண்டுண்டு. வஸ்து பரிச்சேதமான வர்த்தமான விஷயங் களுக்கு "காரணம்—காரியம்" என இருவகை துவந்துவமுண்டு. இப்படி ஏகவஸ்துவாயிரு ந்தும் துவந்துவ ரூபமாய் விளங்கும் ஒன்றுக்கொன்றெதிரான மிதுனசக்தி என்னும் "இணை பிரியா இரட்டை"ப்பிரிவுகளின் சக்திக்குட்பட்டு அவைகளின் தொழிலாய் விளங்கும். "இரா கத்துவேஷம்" என்னும் "இழுப்பு-உதைப்பு"களுக்குட்பட்டு விளங்குவதாயிருப்ப தெதுவோ அதுவே 'உலகம்' என்றும் 'பிரபஞ்சம்' என்றும் சொல்லப்படுவதாம். உலகத்தின் உட்பொரு ளையெடுத்து விளக்கும்போது இந்த மிதுனசக்தியையே அதன் பல்கோடி வேறுபாடுகளிலும் விளங்கவெடுத்துச் சொல்லவேண்டியதாக முடிகிறது. தத்துவ விசாரம்செய்து தத்துவ ஞானம்பெற்று தத்துவ தரிசனம் காணாத கண்மூடிஜனங்களுக்கு தத்துவங்களின் உண் மையை விளக்க வேண்டியபோது கருத்தறியமாட்டாக் குழந்தைகளுக்குக் கிரகிக்க வேண் டிய கருத்தமைந்த கட்டுக்கதைகளை 'உருவகப்படுத்தி'ச் சொல்லுந் தாய்போல், எல்லாமறி ந்த இருஷிகள் தத்துவங்களை யோகமார்க்கத்தால் தீவிரமுயற்சி செய்துணரமாட்டாதவர்க ளுக்குப் புராணங்களாக வமைத்துவைத்தனர். புராணமென்றால் "பொய்க்கதை" என்று அருத்தமல்ல; இப்பிரபஞ்சமே நிலையற்றது, ஆகையால், "பொய்" என்கிற அருத்தத்தில் புராணங்களும் ஆத்மாவொழிந்த மற்ற எல்லாமும் பொய்தான. ஆனால் பிரபஞ்சம் "ஸத் யம்" என்கிற பாவத்தில் புராணங்களும் ஸத்தியமே. காலாதீதமான உண்மைகளைக் கால தேசவரையரைக் குட்பட்டுச் சொல்லவேண்டிய பொழுது புலனறிவுக் குட்பட்டதைக்கொ ண்டே சொல்லவேண்டிய தவசியமாகிறது. புலனறிவுக்கெட்டாத வொன்றைப் புலனறிவுக குட்பட்டதொன்றால் எப்படிச் சொல்கிறது என்றால்,—அளவுக்கடங்காத ஒன்றை அளவுக குட்படுத்திச் சொலவதுபோலே சொலலலவேண்டும். உழக்குப் பாத்திரத்துககுமேல பெரி தான ஒரு அளவையறியாதவனுக்கு சமுத்திர ஜலத்தை உழக்காலளந்து சொல்லவேண்டு மெனறால், உழக்கு, ஜலம், காலம், (அவன் உயிர் அல்லது ஜீவகாலம்) இவைகளைச் சேர்த்து அப்பா இந்த உழககால் அளந்துகொண்டே போனாயானால் நீ, உனபிளளை, பேரன், கொட் பேரன், என்று இப்படி 1008 தலைமுறையானதும் சமுத்திரத்தை யளக்கு முன்வேலை முடி யும் என்று சொல்லவேண்டிவரும். சமுத்திர ஜலம் அளவற்றது எனறு சொல்லுவதறகு பதிலாக, அவனைத்தன் தலைமுறை வழியாக அளவற்ற காலமிருக்கச்செய்து அந்த அளவின மையை அவனுக்குணர்த்த வேண்டியது. சமுத்திர ஜலத்துக்கும் தனக்குமுளள சம்பந் தத்தை யுணரமாட்டாத பேதையாதலால், அதற்கும் அவனுக்கும ஒரு சம்பநதத்தை (அந்த ஜலத்தை அவன விடாது அளந்து கொண்டிருக்கிறான் என்கிற வியாஜத்தால்) உண்டுபண்ணி, அவனுடைய காலத்தை அவனது சநததி வழியாக அளவற்றதாக நீடிக்கச்செய்து, ஒன்றின் அளவற்றதன்மையை, அவனறிவுககுச் சமபந்தப்பட்ட ஒரு அளவற்றதனமையைச் சிருஷ்டி த்து அதனைஉணர்த்த வேண்டியதாகறது. இவ்வளவு சொல்லியும 'அளவற்றதன்மை' இ ன்னதெனறு உள்ளபடி யவனுணாநதானில்லை. அளவற்றதன்மை 'அளவு' ரூபமாம் காலங்

கடந்து காலாதீதமான நிலையிலே யுணரத்தக்கது. காலங் கடந்துபோகும் சக்தி யவனுக்கில்லை; ஆதலால் காலத்தை வளர்த்தி அவன் மனம் குவிந்து விரிந்து மேன்மேலும் வளரச் செய்வதற்கு வேண்டிய ஒரு உபாயத்தைச்செய்து அதையவன் நம்பும்படியாகச் சொல்லி முடிக்கிறோம். இது வெறும் பொய்யாமோ? ஆகாது! இப்படிச் சொல்லாது, அப்பா ஐம்புலனுமடங்க அடக்கினால் அப்பாலே யுண்மையறியலாமென்று யோகபாத்திரனல்லாதவனுக்கு யோகவழியைச்சொன்னால் அவன் வீணே கெட்டுப்போவான். ஏனெனில் ஐம்புலனுமடங்கியவிடத்து அறியாமை வந்து மூடிக்கொள்ளும். அப்பொழுது அவன்கதி முன்னினும் கேடுகெட்டதாகப் போய்விடும். "வர வர மாமியார் கழுதைபோலானாளாம்" என்கிற கதையாக சேதன ரூபமெடுத்து(அறிவுள்ள ஜந்துவாகப் பிறந்து)யோகஞ்செய்யப்போய் அசேதனமாகப்(அறிவற்ற ஜடமாக)போவான், இந்த வுண்மையின் உள்மர்மத்தை திருமூலர் பின் வரும் திருமந்திரத்தில் உபதேசிக்கிறார் :—

"அஞ்சுமடக் கடக்கென்ப ரறிவிலார்
அஞ்சு மடக்கும் அமரரு மங்கில்லை ;
அஞ்சு மடக்கில் அசேதனமா மென்றிட்டு
அஞ்சு மடக்கா அறிவறிந்தேனே."

"அஞ்சுமடக்கா அறிவு" என்றால் என்னவெனில், ஔவையார் சொல்கிறார் கேண்மின் :—

"அஞ்சு மடக்கி யறிவோடிருந்தபின்
துஞ்சுவதில்லை யுடம்பு."

அதாவது, பஞ்சேந்திரியங்கள் "அஞ்சுமடக்க" அறியாமை வந்து மூடும்; இதைச் "சூனியகாலம்" என்கிறார். "சூனியகாலம்" என்றும், "பாழ்" என்றும், "மாயை" என்றும், "இருள்" என்றும் "அஞ்ஞானம்" என்றும் சொல்லும் இந்தத் தத்துவத்தை அறிவாலறிந்து இதுவுந்தாண்டியுள்ள "அருள்வெளியிலிருத்தலாம்" "சிவயோக" நிலையில் "அறிவோடிருந்தபின்" "துஞ்சுவதில்லை யுடம்பு"—யோகிக்கு நித்ரையற்ற நிலையாம் "சதாவிழிப்பு" அல்லது "துரியநிலை" தோன்றுகிறது. "தூங்காமற்றூங்கும்" துரியநிலையிலிருந்து முதிர்ந்தால் "அஞ்சுமடக்கா அறிவறிந்திருத்தலாம்" சகஜநிலை சித்திக்கிறது. ஆகையால், யோகமார்க்க சாதன உண்மைகளையும், புராண விசேஷங்களையும் ஒன்றாகக்கட்டிக் கலந்து போதித்தல் சரியல்லவென்பது பெரியோர் கொள்கையாகவிருக்கிறது. அக்கொள்கையை யனுசரித்து நடத்தலே யுத்தமமாம். புராணம் சிரவணமனனத்துக்குச் சாதனமாக வேற்பட்டது. பக்தியால் நம்பி சிரவணமனனம் செய்து வருகிறவர்கள் கமலாம்பாளைப்போல் பக்தி மிகுதியால் சகுணோபாசனை பலித்து குருதரிசனமுண்டாக அதன்மேல் குருவழிப்பட்டுய்யலாம். "அண்டத்திலுள்ளது பிண்டத்திலும்" ஆதலால்,புராணங்களுக்கு மட்டுமல்ல, பகிர்முகத்தில் நிகழும் ஒவ்வொன்றையும் அகமுகப்படுத்தி கூடார்த்தம் கூறலாம். உண்மையாக உள்ளபடி பார்க்கில் 'பகிர்முகம்' 'அகமுகம்' இரண்டுஞ் சேர்ந்தாலன்றி உலகமென்பதும் தோற்றமென்பதுமில்லை. அதாவது 'உட்பிரபஞ்சம்' 'வெளிப்பிரபஞ்சம்'— இவற்றின் உறவே "உலகஞான"மாம். வெளியிலுள்ளது உள்ளே யில்லாவிட்டால் அதன் அறிவு உதிப்பதில்லை. அப்படியே உள்ளேயுள்ளது வெளியில் இல்லாவிட்டாலும் அதன் அறிவு உதிப்பதில்லை. யாதொன்றை உள்ளிலும் வெளியிலுமாக அறிகிறோமோ அது துவைதஞானம்; இதில்

அகப்பொருள், புறப்பொருள், அவற்றின் சம்பந்தம் என்கிற த்ரிவிதகுணங்கள் நீங்காதமைந்திருக்கக் காணலாம். இதையே வேதாந்த பரிபாஷையில் திரிபுடியென்று சொல்வார்கள். அதாவது, "காண்பான்-காக்ஷி-காண்பொருள்"—அல்லது, "திருஷ்டா-தரிசனம்-திரிசியம்"= "பார்ப்பான்-பார்வை-பார்க்கப்படும்பொருள்." இந்த மூன்று அம்சங்களின்றி அறிவுதயமென்பதில்லை. அகம், புறமிரண்டிற்கும் பேதமின்றி உள்ளேயிருப்பதே வெளியிலும் வெளியிலிருப்பதே உள்ளிலுமாக ஏகரஸமாய்க் காண்பது அத்துவிதஞானம். ஒரு குச்சியை இரு முனைகளுள்ளதாகவும் அவ்விரண்டையும் சேர்த்துப் பிணைக்கும் 'நீளம்' என்கிற குணம் பொருந்திய ஒருவஸ்து இருப்பதாயும் அறிவது திரிபுடி ஞானம். இப்படி பரிச்சின்னமாயுணராமல் அடியும் நுனியும் நீளத்தில் ஒடுங்கிப்போக இருமுனைகளையும் விழுங்கி நிற்கும் நீளமொன்றையே யுள்ளபடி யுணர்வது அத்துவிதஞானம். அப்பொழுது கோல் அல்லது குச்சியென்கிற நாமமும், அதன் இருமுனைகள் என்கிற துவந்துவமும் நழுவிப்போகும். இதையே நாமரூபமற்றுப் போகிறது என்று சொல்வார்கள். அந்த வஸ்துவை நாமரூபபேதங்களைத் தள்ளியுணர்ந்தால் உணரத்தக்கதென்னவுண்டோ—இங்கே வார்த்தை பிசகிப்போகிறது—நாமரூபங்களைத் தள்ளினால் "உணரத்தக்க"தென்பதொன்றில்லாமற்போம். "உணரத்தக்கது" என்று ஒன்றிருந்தால், "உணர்கிறவன்" என்று ஒருவன் இருக்கவேண்டிய தவசியம். "தெரிவானும் தெரிபொருளும் ஒன்றாயின்" தெரிசனமும் அதில் கலந்துபோம்.

"களங்கமற்ற கண்ணாடிதன்முன் வேறோர்களங்கமற்ற கண்ணாடிகாட்டும்போது
விளங்கியதன்மயமாகி அபேதமாகி விகற்பமின்றி நிருவிகற்பமானாற்போல"

"உணர்கிறவனும்," "உணரத்தக்கதும்" உபாதிரஹிதமாக நிற்குமானால் "நானே நீ, நீயே நான்" என்று சொல்வதற்குமின்றி இரண்டும் அபேதமாகக் கலந்து ஒன்றாகப்போகும். இது பூர்ணநிலையடைந்து அதுவுந்தாண்டிய முக்தர்களுக்கே சாக்ஷாத்காரமாம். வாக்கு மனத்துக்குமெட்டாத அந்த அனுபவத்தைப்பற்றியெழுதியும் கருதியும் பிரயோஜனமில்லை. "அஞ்சுமடக்கா அறிவு"வரையில் அதாவது திரிபுடி நழுவும் வரையிலே ஒருவிதமாகக் குறிப்பாய்ப் பேசலாம். திரிபுடிநழுவினவிடத்துள்ளதாம் "அஞ்சுமடக்கா அறிவையறிந்த" அறிவு அத்துவித சாக்ஷாத்காரமாதலால் இரண்டற்றதொன்றாமதை "இப்படியன் இவ்வுருவன் இவ்வணத்தனிவனிறைவனென்றெழுதிக் காட்டொணாதே!" "தூராதிதூரம் சொல்லத்தொலையாது, பாராப்பராபரம்பார்" என்கிறார் ஔவையாரும்.

ஆகையால் துவந்தாவஸ்தைக்குட்பட்ட மட்டில் பிரபஞ்சவியல்பைப் பஹிரஹமுகமாக விளக்கவெண்ணிப் பதினெண்புராணங்களையும் மேலோர் இயற்றினர். இப்புராணங்களில் ஓரிடத்தில் மஹிஷாஸுரமர்த்தனம் என்று வருகிறபாகத்தைக்குறித்து உள்ளமுகந்தநண்பரொருவர் உண்மையைக் கூறக்கருதி கேவலம் பஹிர்முகமாகமட்டும் அதன் கருத்தையுணர்ந்து ஜனங்கள் கெட்டுப்போவதைத் தடுக்குமாறு அதன் உட்கருத்தை யொருவாறு "பிண்டாண்டபரமாக"—அதாவது யோகவழியில் தற்பரமாகவறிந்துய்யவேண்டிய மர்மத்தை அக்கதை சம்பந்தமாக வெளியிடலானார். அதை வாசித்துப்பார்த்து உண்மையாகப்படுவதை யுள்ளபடியுரைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ள அதற்கிசைந்தோமாதலால், அவர் எழுதினதைப் படித்துப் பார்க்கவும், உள்ளத்துதித்தெழுந்ததோர் உண்மையை முன்பின்பீடிகைசேர்த்துப் பொதுவாக எல்லோருக்குமுபயோகமாகும்படி யிங்கேயெழுதலானோம்.

பிரபஞ்சத்தின் மூலகாரணமாம்‘ துவந்துவசக்தி’யை விளக்க “இருள்-ஒளி” என்கிற துவந்துவத்துக்கிசைய “அசுரர்-தேவர்”என்ன இருதுவந்துவசக்திகளைச்சிருஷ்டித்தார்கள். இவையிரண்டும் ஈசுவரனுடைய மனோசக்திகளன்றி வேறல்ல. பிரபஞ்சத்தின் ஜீவகோடிகளின் சமஷ்டிரூபம் நான்முகப்பிரம்மா. அந்தபிரம்மாவினுடைய சங்கல்பரூபமனதாம் புத்திரன் பிரஜாபதி. (இதனால் பிரஜோற்பத்திக்குக் காரணம் பிரம்ம சங்கல்பம் என்பது உணரவேண்டிய உண்மை.) இந்தப்பிரஜாபதிக்கு இரண்டு புத்திரர்கள்: அவர்கள்பேர் முறையே (1) இந்திரன், (2) விரோசனன். இவர்கள் இருவரும் பிறந்து வளர்ந்து பிரஜாவிருத்திபெற்று வருநாளில் (‘சங்கல்ப விருத்தியால் சம்ஸாரம் பெருகினபோது’ என்பது உள்ளுணர் உண்மை) வாழ்நாள் துக்கமும மரணமும் நிறைந்ததாகவிருப்பதைக்கண்டு, என்றுமழியாத நித்யவஸ்து வொன்றிருக்கிறது, அதையறிந்தால் என்றுமழியாத நித்யசுகமனுபவிக்கலாமென்று பிதாசொல்லக்கேட்டிருந்ததை நினைத்து அவரிடம் போய் அதையறிந்து நித்யசுகம்பெற வேண்டுமென்று நாடிச்சென்றார்கள். இருவரும்சேர்ந்து தங்கள் பிராணதாதா (பிதா)வாகிய பிரஜாபதியிடம் சென்று அவரை வணங்கித் தங்கள் கோரிக்கையை விண்ணப்பம் செய்து கொண்டார்கள். அப்பொழுது பிரஜாபதி, தன்னை மறந்த ஒருவனுக்குத் தன் நிழலைக்காட்டித் தானாகும் ஆளையுணர்த்திய கதையின் உபாயத்தை நினைந்து, இந்த தேகம் பிரம்மத்தின் (நிழல்) சாயையன்றி வேறல்ல வென்பதையுணர்த்துவான் பிரம்மத்தைக் காட்டவேண்டுமென்று கோரிய தன் புத்திரர் இருவர்களுக்கும் கங்காளம் நிறைந்த ஜலத்தைக் காட்டி அப்பா அதில் போய்ப்பார் தெரியுமென்றார். இருவரும் போய்ப்பார்க்க அதில் தங்களுடைய நிழல் தெரியக்கண்டு தேகம்தான் பிரம்மம் என்று சொல்கிற ஆத்மாவெனக்கருதி “பார்த்தோம், தெரிந்துகொண்டோம்” என்று சொல்லி விடைபெற்றுக்கொள்ளச் சென்றார்கள். பிரஜாபதி இவர்களின் அவசர புத்தியைக்கண்டு, அவசரக்காரனுக்கு புத்திமட்டாகையால், இவர்களுக்கு உண்மையுபதேசம் செய்ய இன்னம் பக்குவம் வரவில்லை, ஆதலால் போய்க்கெட்டலைந்து திண்டாடிப் பின்னும்வரட்டுமென்று நினைந்து “சரி! வந்தகாரியம் முடிந்ததானால் போய்வரலாமே!” என்றார். இருவரும் தேகமே ஆத்மாவென்று கருதிக்கொண்டு சென்றார்கள்: கொஞ்சதூரம் போனபின் இந்திரன் ஆலோசிக்கவும் “ஆத்மா அழிவற்றதாயிற்றே” —“தேகம் அழிவுள்ளது-தேகமழிந்தால் நிழலுமிராது. இதில் ஏதோ நாமுணராத மர்மமிருக்கிறது. நிதானித்திருந்து கேட்டுத்தெளியாமல் அவசரப்பட்டு வந்துவிட்டோ”மென்று நினைத்து, தன் அவசரபுத்தியைக் கண்டித்து வருந்திப் பின்னும் பிரஜாபதியையடைந்து, “ஸ்வாமி! நான் அவசரப்பட்டு மோசம் போனேன்! உண்மையை நன்றாக விளங்கச்சொல்லல்வேண்டு” மென்று தன் சந்தேகத்தை வெளியிட்டுக் கேட்டுக்கொண்டார். 30-வருஷம் குருகுலவாசம் செய்தால் போதிப்போமென்று அவரைத் தன்னிடமிருக்கச்செய்தார். பிறகு போதிக்க, பின்னுமிப்படி மோசம்போய்ப் பின்னர் சந்தேகப்பட்டுக்கொண்டுவர, இப்படி திருமபிவந்த ஒவ்வொருதரமும் அநேக வருஷகாலம் தன்னிடமிருக்கச்செய்துக் கடைசியில் 101-வருஷமிருந்தபின் சரியானபடியுபதேசம்செய்து “அப்பா இப்பொழுது நானுபதேசித்து நீ கிரகித்தவுண்மையை இனி நீ நிதித்தியாசனத்தால் ஸ்வானுபவத்துக்குக் கொண்டுவரவேண்டும். குருவாலாகத்தக்கது இவ்வளவுதான்” என்று சொல்லியனுக்கிரகித்தனுப்பினார். விரோசனனோ “தேகமேயாத்மா”

வென்று முதலில் தப்பாகவுணர்ந்ததையே ஸ்திரமாக மனதிற்கொண்டு திரும்பிவராமலே போய்விட்டான் என்பது கதை.* தேவர்களும் அசுரர்களும் இந்திரன், விரோசனன் இவர்களிருவர்களுடைய சந்ததிகள். தேவர்கள் (பிரமத்துக்கு சமீபத்தில்) பிரம்மசாமீபியத்திலிருப்பவர்கள். அசுரர்கள் பிரமத்துக்கு தூரத்திலிருப்பவர்கள். தூர-சாமீபிய துவந்துவர்களான இவர்களுடைய இராகத்துவேஷ (விருப்பு வெறுப்பு) குணவிசேஷங்களால் இப்பிரபஞ்சம் விருத்தியாய் வருகிறது. அதாவது "பிரம்மோஹம்—" (நான் ஆத்மா) என்கிற சங்கல்பத்தின் சிரவண மனன நிதித்தியாஸன சிருஷ்டிகளுக்கும், "தேஹோகம்" (நான் தேகம்) என்கிற சங்கல்பத்தின் சிரவண மனன நிதித்தியாஸன சிருஷ்டிகளுக்கும் விடேன் தொடேன் என்கிற போராட்டம் எப்போதுமிருந்துக்கொண்டே யிருக்கிறது. இந்த ஓயாச் சண்டையில் சிலசமயம் தேவர்கள் ஜயிக்கிறார்கள்; சிலசமயம் அசுரர்கள் ஜயிக்கிறார்கள். தேவர்கள் ஜயமடைந்தால் சாத்துவிகமும் (நல்லதன்மையும்) சாத்துவீகவிர்த்தியும் உலகத்தில் விசேஷமாக வியாபித்திருக்கும். அப்பொழுது காலம் பொன் வெள்ளி யொத்ததாக வாகிறது. இதுவே கிரேதாயுகம், திரேதாயுகம் என்பர். கிரேதாயுகத்தில் தர்மம் நாலுகாலாலும் நடக்கும். திரேதாயுகத்தில் தர்மம் மூன்றுகாலால் நடக்கும் (துவாபரயுகத்தில் இரண்டு காலாலும் கலியுகத்தில் ஒரு காலாலும் நடக்கும்) இவையிரண்டும் அசுரர்கள் ஜயிக்குங்காலமாம்.

"தேஹோஹம்" (நான் தேஹம்) என்கிற சங்கற்பம் முற்றி முதிர்ந்துபோனால் மரண சம்பவம் நிச்சயம். தேகம் அழிவுள்ளதாயினும் சங்கற்பசக்தி ஈசுவராம்சமாதலால், ஈசுவராவதாரத்தால் அந்த சங்கற்பசக்தி நழுவினாலன்றி மரணசம்பவம் அணுகாமல் பாதுகாக்கும் சக்தி அசுரர்களுக்குண்டு. "தேஹோஹம்" என்னும் பாவனை சங்கற்பசக்தியால் அனேகம் ப்ரம்மகல்பம் வரையில் தாங்கும். பிரம்மாவே ஈசுவர சங்கற்ப சொரூபமாயிருத்தலால், ஒரு சங்கற்பம் முதிர்ந்துபோனால், சங்கற்பத்தாலே சங்கற்பத்தைக் கெடுப்பது அசாத்தியம். விஷ்ணு ஸ்திதிகர்த்தாவாதலால், சங்கற்பம் முதிருமுன் போஷணசக்தி குறைவதால் (அதாவது சங்கற்பத்தை முதிரவிடாது தடுப்பதால்) விஷ்ணு தேஹோஹபாவனையின் வலியைக் கெடுக்கலாம். ருத்திரர் விகற்பசக்தி ஸ்வரூபமாதலால்அவருக்குதேஹோஹசங்கற்பசக்தியை அதற்கு மாறும் விகற்பசக்தியால் கெடுத்து விபரீதம் விளைக்க அதிக சக்தியுண்டு. சங்கற்ப விதியறிந்து சங்கற்பசாதனம் முற்றும் பெற்றபோது இந்தத் திருமூர்த்திகளாலுமாகாது இம்மூவர்களுடைய அம்சமும் சேர்ந்த சம்ஷ்டி ரூபமான ஈசுவரனுடைய ஸ்வரூபமாம் பராசக்தியேவந்து (சுத்தாத்ம சங்கற்பத்தால் தேகாத்ம சங்கற்பத்தைக்) கெடுக்கவேண்டும்.

"தேஹோஹம்" என்கிற சங்கற்பம் தடித்துப்போனால் அது எருமைமாடுபோல் தடித்துக் கொழுத்து சூடுசுரணையற்று மதோன்மத்தனைய் வளர்ந்து காலனுக்கு வாஹனமாய் (மரணத்துக்கு ஆதாரமாய், மரணமற்று)ப் போகிறது. அசுரபாவமாம் "தேஹோஹம்" என்கிற சங்கற்ப பாவனை சிரவணமனன நிதித்தியாஸனத்தால் தடித்துக் கொழுத்துத் தழைத்துப் போகிறது. ("வேலியே பயிரைமேயத்" தலைப்பட்டாற்போல) பிரபஞ்ச விருத்திக்குக் காரணமாக விருக்கும் துவந்துவ ரூபங்களில் ஒன்றாக விருந்தது மற்றதைத் தன்னு

* (இதை சாந்தோக்கியோபநிஷத்தில் பூரணமாகப் பார்த்துணரத்தக்கது.)

ளடக்கி ஏகீபாவத்தால் தானே யெங்குமாகப் படர்ந்து உலக விருத்தியைத் தடுத்து சேதன மெல்லா மழிந்து அசேதனம் விர்த்தியாக்ச் செய்கிறது. அப்பொழுது "இராக்த்துவேஷம்" என்கிற துவந்துவமற்று எங்கும் துவேஷமொன்றே பரவலாகிறது. (இப்படியே ஸத்வம் மேலிட்டாலும் உலகவிர்த்தி குறையும். இதற்குதாரணம் ஞானவாசிஷ்டம் பிரஹலாதன் சரித்திரத்திற் காணலாம்.) ஆகையால் "தேஹோஹம்" என்கிற பாவனை தடித்துப்போனபோது "பிரம்மோஹம்" என்கிற சேதனவிருத்தி குறையவும் "சமநிலை" ஸ்வரூபமாயுள்ள பராசக்தி இவ்விரண்டுக்குமுள்ள ஏற்றத்தாழ்ச்சி அளவுக்குமிஞ்சிப்போனதைத் தடுக்கும்படி நாசகாரணமாக அவதாரமாகிறாள். இதையே இன்னொரு விதமாகச் சொல்லவேண்டுமானால், பகவானுடைய ஜீவசக்தி ஜடசக்தியிரண்டும் சமநிலையாக விருப்பதே ஈசுவர ஸ்வரூபமாதலால், அவ்விரண்டு சக்தியும் மிதமிஞ்சிப் பேதப்பட்டு நிற்குங்கால் துவந்துவஸ்வரூபசக்தி தர்மமாம் இராகத்துவேஷ வியக்கத்தாலே மேலிட்ட அதர்மம் நசித்துப்போக தர்மம் தலையெடுக்கிறது. இந்தவுண்மையை விளக்குவதே "மஹிஷாசுரமர்த்தனம்" என்கிற புராணக்கதை. முற்றிமுதிர்ந்து தடித்துப்போன தேஹோஹ சங்கற்பத்தால், ஜடசக்தியிற் கலந்திருந்த (வியஷ்டிரூபமான) ஜீவசக்தி யம்சம் விடுபட்டுப்போக, இது அண்டத்திலுள்ள (தேவர் கூட்டமாம்) சமஷ்டி ஜீவசக்தியோடு ஸ்வபாவத்தால் சேர்ந்துகூட, இந்த வியஷ்டி சக்திகளின் சேர்க்கையால் சமஷ்டி சக்தியில் ஒருவித சலனமுண்டாக ('தேவர்கள் முறையிட') அதுகாரணமாக சமஷ்டி ஜீவசக்தியாம் பராசக்தியிலிருந்து (இருசக்திகளும் சமநிலையடையவேண்டுமென்கிற சங்கற்பரூபமான) இச்சாசக்தியொன்று பிறந்தது. இது பிரம்மத்தின் இச்சாரூப சக்தியாதலால் பெண்ணுருவமாகச் சமைந்தது. (அதாவது, பிரமமசொரூபவித்தைத் தரிக்கும் யோக்கியதையுள்ளதாயிற்று.) இந்த ரூபத்தின் அங்கவர்ணனை இந்த சக்தியின் தத்துவங்களை யுணர்த்துவதாம். தத்தாரிப் பிள்ளையைச் சொத்துக்களெல்லாமழியும் வரையில் அவனிஷ்டம் போல் போகவிட்டு, அவனிஷ்டப்படி யெல்லாம் செலவிட்டுச் சிரிப்பாணி செய்து வறுமையடைந்து சிறுமைப்பட்டுத் தன் பிராணனை வாங்கிக் கொள்ளப்போகும் சமயத்தில் அவனைப்பெற்ற தாய் பலாத்காரமாய் அவனைத்தடுத்து ரக்ஷிப்பதுபோல, "தேஹோஹம்" என்கிற பாவனையால் வரும் துன்பங்களையெல்லாம் உணர்ந்தனுபவிக்கும் வரையில் தடையின்றி விட்டு, அதனால் அழிந்துபோகும் காலம் வருகையில் பராசக்தி வலுவில் வந்து பலவந்தமாய் எதிர்த்து எப்போதும் அழியும் சுபாவமுள்ள தேஹத்தை (தஹித்து) ஸம்ஹரித்து அழிவில்லாத தன் அம்சமாகிய 'அஹம்' தத்துவத்தை அதனின்றும் பிரித்துத் தன்னோடைக்கியமாகச் செய்து கொள்கிறாள். இப்படியாக தர்மம் தலை தடுமாறும்போதெல்லாம் (ஆத்மரூப) பிரமமசங்கற்பமான ஈசுவரசக்தி அவதாரமாகி (தோன்றி) தர்மத்தை நிலைக்கச்செய்கிறது. (அதாவது, ஜடஜீவசக்திசமத்துவத்தை நிலைநாட்டுகிறது.) ஜடஜீவசக்தி யிரண்டும் சமநிலையடைந்தால் (அநிர்வசனீய மாயையாகி) சங்கற்ப முடிவாம் பூர்ணமாகி சங்கற்பரஹிதமாய்ப் பிரம்மத்தில் லயமாகிறது. இதை யோகிகள் குண்டலியோக சாதனையால் தன்னுள் தானயிருந்து ஷடாதார நிலையுணர்ந்து குண்டலி சக்தியைக் கிளப்பிச் சுழுமுனையில் பிரவேசிக்கச் செய்து அருள்வெளி தரிசனங்கண்டு ஆத்தும பூரணமடைவதைத் திருமூல தேவர் "ஆதார ஆதேய"த்தைப்பற்றிச் சொல்லுமொரு மந்திரத்தில் வெகு அழகாகச் சொல்லியிருக்கிறார். அவர் திருவாய்மலர்ந்தருளிய திருமந்திரோபதேசம் இது:—

"ஆமையொன்றேறியகம்படியானென
ஓமவென்றோதியெம்முள்ளொளியாய் நிற்கும்
நாம நறுங்குழற்றையலைக்கண்ட பின்
சோமநறுமலர்சூடி நின்றாளே."

இம்மந்திரத்திலடங்கிய வுண்மையை யோகாப்பியாசிகளுக்கன்றி மற்றவர்களுக்குள்ளபடி யுரைப்பது சாத்தியமன்றாயினும் அகமுகப்பட்டுப் பிராணனை வழிபட்டு உண்மையுணர்ந்தவர்கள் பின்வரும் அப்பியாசியனுபவத்தால் இதனுண்மை யுணர்ந்துகொள்ளுமுபாயமுணரலாமென்று அதைக்கீழே வரைகிறோம்.

[1]மூலக்கேணியில் மூழ்கிக்கிடந்த அதிசயமான ஆமையொன்று[2]
[3]நாலுசக்ரக்கோட்டையேறி நான்முகனுக்குப்படியாதாக
[4]ஓம் என்று சொல்லும் மந்திரத்தை யுள்ளடக்கி நாதத்திலேற்றி*
[5]ஒளியென்று சொல்லு முள்வெளியிலுள்ள அருட்தாய்பாதம்பணிந்து போற்றி
† [6]நாதமுடிவிலுள்ள வந்த நல்லாளோடுங்கூட விரும்பி
நாதமுடிவிலுள்ள வந்த நல்யோகந்தன்னை நன்றாவியற்றி
நாதமுடிவிலிருந்த நாட்டத்தால் 'நானு' 'நீயு' மற்றபோது
நாதமுடிவிலுள்ள வந்த நஞ்சுண்டகண்டன்றானேயாகவும்*
* ஓமவென்றோதவெம்முள்ளொளியாய்நின்றநாமநறுங்குழற்றையலுமப்போ
சோமஸ்கந்த சொரூபமான சுகவெளியிற் கரைந்துநின்றாள்.

ஓ° தத்ஸத்.

---

1. மூலாதாரத்தில் 'வித்தில் மரம்போல்' மறைந்திருந்த. 2. Refers to the six sense-consciousness.
3. நாற்கோணவடிவான ஸ்வாதிஷ்டானசக்ரம். 'ஐ௦' பீஜம். அதிதேவதை நான்முகப்ரம்மா.
* 4. நாதானுசந்தானக்கிரமங்கூறுகிறது. 5. விந்துதரிசனமென்னும் அனுபவங்கூறுகிறது.
6. நாதமுடிவில் விந்து மத்தியி லுள்ளவள் 'சிவசக்தி ஐக்கிய ஸ்வரூபிணி'யாம் பராசக்தி.

† comp. "நாதமுடிவில் நல்லாளிருப்பது.
நாதமுடிவில் நல்யோக மிருப்பது.
நாதமுடிவில் நாட்ட மிருப்பது.
நாதமுடிவில் நஞ்சுண்ட கண்டனே."—திருமந்திரம்.

* அ+உ+ம்+அ=ஓம்+அ= 'ஓம' என்று ஓதி-நாதானுசந்தானம் செய்து. (பிராணவோபாசனை விதியை குருமுகமாயறிந்தப்பியசிக்க வேண்டியது.)

# INDIA'S AWAKENING.

## இந்தியா முன்னுக்கு வருவதெப்படி.

"தூங்கினவன் கன்று கடாக்கன்று" ஆதலால் விழிப்பாயிருக்க வேண்டும்.
காங்ரேஸும் கான்பரேனஸும், மஹா சபைகளும் மண்டலிகளும்.

---

சென்ற டிசம்பர் மாசக்கடைசியில் ஸ்ரீ காசியில் கூடின கூட்டங்களுக்கும் சபைகளுக்கும் அளவில்லை. காங்ரெஸ் மஹாசபை 21–வது வருஷாந்தக் கூட்டம் கூடிற்று. அஃதோடு இந்தியாவின் பலதொழிற் பொருள்களும் விளைபொருள்களும்நிறைந்த கண்காட்சிசாலையும் வெகு விமரிசையாக நடந்தது. ஆசாரச் சீர்திருத்த மஹா ஜனசபையுடன் "பரத மஹில பரிஷத்" என்னும் இந்திய மாதர்கள் மஹாசபையும் கூடிற்று. இம்மாதர் மஹா சபையில் ப்ரதாப்கர் நாட்டு ராணி ஸாஹிபா அக்கிராசனாதிபதியாக வீற்றிருந்தனர். இவைகளன்றி "பாரத மாஹாமண்டலி" யென்னும் ஆரியமத மஹாமண்டல சபையும் பிரயாகையில் கூடி மத விஷயங்களைப்பற்றி ஆசாரியர்கள் பண்டிதர்கள் உபதேசங்களையும் அபிப்ராயங்களையும் கேட்டு ஆரியமதம் பரவ வேண்டிய வழி வகைகளைப்பற்றி யோஜித்து வருகிறார்கள்.

காங்ரெஸ் மஹாசபையில் மிஸ்டர் கோகலே ப்ரெஸிடெண்டாக விருந்து நடவடிக்கைகள் நடத்தினார். இவர் ஜஸ்டிஸ் ரானடேயவர்களுடைய சிஷ்யராயிருந்து தேறினவர். 20–வருஷகாலம் பூனாவில் பெர்குஸன் காலேஜில் அன்னவஸ்திரத்துக்குமட்டும் போதும்படியாகக் கொடுத்த ரூபா 75 சம்பளத்தைப் பெற்றுக்கொண்டு வெகு பாடுபட்டுழைத்து 25 ரூபாய் பென்ஷன் பெற்றுக்கொண்டு அப்பணிவிடையை விட்டு, இப்பொழுது இத்தேசப் பொதுவுக்குழைத்து வருகிறார். இவர் இராஜப் பிரதிநிதி சபையின் சட்ட நிரூபண சபையில் ஒரு மெம்பர். பூரணமாகப் படித்தவர். கூர்புத்தியுள்ளவர். நல்லவிவேகி. தேச க்ஷேமத்துக்குழைப்பதைப் பணிவிடையாகக்கொண்டுழைக்கும் கர்மயோகி. இந்தியா முன்னுக்கு வரவேண்டுமானால் இவரைப்போல் ஒருவரல்ல; நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் நம்மவர்களில் படித்துத் தேறினவர்கள் தேசக்ஷேமத்துக்கென்றுழைக்க கங்கணங் கட்டிக்கொண்டு வைராக்கியம் பூண்டுழைக்கவேண்டும். ஸ்ரீகாசியில் மிஸ்ர்ஸ் பெஸன்ட் ஏற்படுத்தியுள்ள ஸெண்ட்ரல் ஹிந்துகாலேஜில் உபாத்தியாயர்களாகவும் ப்ரொபெஸ்ஸர்களாகவும் பண்டிதர்களாகவு முழைக்குமவர்கள் ஐரோப்பியர்களும் இந்தியர்களும் இப்படியே ஜீவனத்துக்கு வேண்டிய சொற்ப வேதனமட்டும் பெற்றுக்கொண்டு அன்பு காரணமாக ஆத்மார்த்தமாக வுழைக்கிறார்கள். இந்தியர்கள் ஆங்கிலேயரைப்போலாகவேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். அவர்களைப்போல் காசும்பணமும் ஆக்கினையும் அதிகாரமும் வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். இவைகளையெல்லாம் பூர்த்தியாக அனுபவித்துப் பார்த்து இவை சாசுவதமானவையல்ல, இவற்றிற்காக வாழ்நாள் முழுவதையும் செலவிட்டுழைப்பது ஜன்மசாபல்யத்தை யிழந்து துன்பக்கடலில் பிறந்திறந்து வீழ்ந்து பரிதபிப்பதாமென்று நமது முன்னோர்களான இருஷிகள் அனுபவரீதியாகக்கண்டு ஸநாதனதர்மத்தைநாடி யதுவே சாசுவதமென்றும் ஜன்மசாபல்யமென்று முழைத்து வந்தார்கள். அப்படிப்பட்ட மஹான்களுடைய இரத்தம் நமது நாடிகளில் ஓடிக்கொண்டிருக்கையில், ஆத்மலாபமென்ப தின்னதென்

பதை யுணராத மிலேச்சராய்த் திரிந்த முன்னோர்கள் சந்ததியிலுதித்து தேகமே யாத்மாவென்னும் அநாத்ம வாஞ்சை மிகுந்த மேற்றிசையார்களைப்போல் அழியும் பொருள்களுக்காசைப்பட்டுழைப்பது நமக்கு இயல்பாக அமையுமோ. அவர்களுடைய நாகரீகத் தளுக்குகளையும், அதிகார ஆடம்பரங்களையும் ஊகபுத்தியாலுணர்ந்து கிரகித்து அவர்களுக்கும் மேலான படியிலேறி, அவர்களுக்கு வழிகாட்டிகளா யிருக்கவேண்டியது நம் கடமையாயிருக்க அதைச்செய்ய ஆற்றாமல், நமது சுபாவத்துக்கும், சாசுவத தர்மத்துக்கும் விரோதமாக நம் வழியைவிட்டு அவர்கள் வழியில் நடக்க ஆசைப்படுவது ஏனோ? இதனால் நாம் ஏழைகளாக ஆங்கிலேயருக்கு ஊழியம் செய்பவர்களாக விருக்கவேண்டுமென்பது நமது கருத்தல்ல. அவர்கள் எப்படி தங்கள் வியாபாரத் திறமையால் முன்னுக்குவந்து இராஜ்ஜிய பரிபாலனம் செய்யும் யோக்கியதை பெற்றார்களோ, அப்படியே நாமும் நம்முடைய ஆத்மபுத்தியினால் அவர்களிலும் மேலானவர்களாக விளங்கி அவர்கள் நம்மை மதிக்குமாறு செய்துகொண்டு நமது நாடு நகர்களையும் தேசங்களையும் அவர்கள் துரைத்தனமுறைமையால் ஆள்வதுபோல், அவர்கள் மனோபுத்தி சக்திகளை நம்வசப்படுத்தி ஆத்மலாபம் சித்திக்க வுழைக்கும் வழிகாட்டி அவர்கள் மனதை அன்பினால் ஆளலாம்; அப்படி ஆளவேண்டியதற்கு நாம் ஊக்கத்திலும் முயற்சியிலும் சாமர்த்தியத்திலும் அவர்களுக்குப் பின்னடைந்தவர்களில்லையென்று காட்டவேண்டும். அவர்கள் பேதபுத்தியைப் பெரிதாகக்கொண்டுழைக்கிறவர்கள். நாம் ஆத்மபுத்தியைக்கொண்டு உழைக்கவேண்டும். அசுரபாவத்தை ஆத்மபாவத்தால் வெல்லலாமேயன்றி நாம் அசுரபாவத்தை அசுரபாவத்தால் வெல்லல் முடியாது. அவர்கள் பரம்பரையாக தேகாத்மவாதிகள். நாமோ பரம்பரையாக சுத்தாத்மவாதிகள். தேகாத்மவாதம் ஜடத்தையெல்லாம் வெல்லும்; ஆத்மசக்தியொன்றே ஜடசக்தியைவெல்லும். ஆகையால் நாமும் அவரைப்போல் வேஷம்போட ஆசைப்படுவதைவிட்டு, நமது சுவபாவத்துக்கிரண்டு செய்யாமல், நம் முன்னோர் அனுசரித்த ஸநாதன தர்மத்தையே மேலாகக்கொண்டு அனுஷ்டித்து அதில் தேர்ந்தவராகி நமது நிலையைச் சீர்திருத்திக்கொள்வதோடு நம்மையாளும் ஆங்கிலேயரையும் நாம் மனதால்ஆள முயலவேண்டும். பூமியிலுள்ள இராஜ்ஜியங்களெல்லாவற்றையும் ஜயித்து இனி ஜயிப்பதற்குத் தேசமில்லையேயென்றங்கலாய்த்த மஹா அலெக்ஸாந்தரும் தன்னைவென்று தன் மனதையடக்கி யாண்டுவந்த ஒரு இருஷியைக்கண்டு அவரை வெல்ல முடியாது, தான் வருந்தியழைத்தும் அவர் தன்னை லக்ஷியம் செய்யாது உதாசீனமாக விருந்ததைக்கண்டு மனம் புழுங்கியும், அவரது ஆத்ம விலாசத்தை ம், ஆனந்த அனுபவத்தையும் உள்ளத்தில் உணராமல் உணர்ந்து அவர் அறிந்த இரகசியம் நாம் அறிவதற்கில்லையேயென்று மனம் நொந்து வருந்தினார். நம்முடைய முன்னோர்களான இருஷிகள் தபசிகளாய்க் கானகத்தே வசிப்பவர்களாயினும் இராஜாக்களெல்லாம் அவர்கள் அடிபணிந்து தொழ ஆத்மானந்தர்களாகவே விளங்கினார்கள். ஆகையால் நாம் ஆத்மபுத்தியைக்கைவிடாது ஆத்மானந்த அனுபவத்தைத்தேடி அதனாலேயே அனாத்மவாதிகளான ஆங்கிலேயர்களுக்கு அவர்கள் தொழும் கிறிஸ்து போனவழியை உள்ளபடி உண்மையாயுணர்த்திக்காட்டி யதனால் அவர்கள் மனத்தை வசப்படுத்தவேண்டும். அகங்காரவன்மையால் ஆளுவதிலும் அருட்சக்தியால் ஆளுவது மேல். அகங்காரம் பயத்தைக்கொண்டு ஆள்கிறது. அருளோ அன்பைக்கொண்டு ஆள்கிறது. வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கலைகிறவன்

கதையாக, நாம் விரும்புமதிகாரம் நம்மிடத்திலேயிருக்க அதை யுணர்ந்துபயோகிக்கத் தெரியாமல், இடைத்தெருவெல்லாம் சுற்றித் திரிகிறோம். வெண்ணையை உருக்கினால் நெய்யாகுமென்கிற மர்மம் ஒன்றுதான் இடையர்களிடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டியது. இந்த அறிவு இடையர்களுடைய பிதிரார்ச்சித சொத்தல்ல. ஊன்றிப் பார்த்துணர்கிறவனுக்கு இந்த அறிவு தானே யுதிக்கும். இப்படி யூன்றி யாலோசித்துணரத் தெரியாமல் "எங்கப்பன் எட்டேர் வைத்துழுதான்; எனக்குத்தார்க்குச்சி பிடிக்கத்தெரியாது" என்கிற மூடாத்மாவைப்போல், எங்கள் முன்னோர்கள் ஸநாதன தர்மத்தை யனுஷ்டித்தார்கள்; அதை வெகு நன்றாகவிளக்கியும் இருக்கிறார்கள்: ஆனால் எனக்கு ஒன்றும் தெரியாது— என்று மூடப்பெருமை யடித்துக்கொள்ளாமல் ஸநாதன தர்மத்தை யுணர்ந்தொழுகி அதனுண்மையை யுள்ளபடி கிரகித்து அனுபவித்து அக்கொள்கைகளை இக்காலத்திற்கேற்ற நடத்தையிலமைத்துக் காட்டவேண்டும். ஸ்ரீ காசியில் கூடிய எல்லா சபைகளிலும் பேசியவர்கள் ஆத்ம வித்தையே மேலென்றும் அதையனுசரித்தே மனிதன் இகபரமிரண்டிலுமுள்ள பாக்கியங்களையெல்லாம் பெறவேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறினார்கள். காங்ரெஸ்பரெஸிடெண்டு இந்த உண்மையை உணர்ந்த எல்லாரும் நம்தேசத்தையே பெற்ற மாதாவாக அன்புவைத்து ஆசிரயித்து அவளுக்காக உடல் பொருளாவியையும் தத்தம் செய்துழைக்க வேண்டுமென்றார். சாஸ்திரங்களையும் வேதங்களையும் பழங் கதைகளென்று தள்ளி நவீன நாகரீகப்பற்றி நமது ஆசாரங்களைச் சீர்திருத்த வேண்டுமென்றுழைத்து வரும் நமது ஆசாரச்சீர்திருத்த சபையாருங்கூட, அவர்களுடைய ஜெனரல் செக்ரிடெரி மிஸ்டர் ஜஸ்டிஸ் சந்தரவாக்கர் மூலமாக ஸநாதன தர்மத்தைப் புகழ்ந்து பேசி, ஸநாதன தர்மத்தை யனுஷ்டித்தே நாங்களும் சீர்திருந்தத்தைக் கோருகிறோம்: காசிப்பண்டிதர்களுக் கொன்றும் தெரியாது, நாங்கள் ஸநாதன தர்மத்தை யனுஷ்டிக்கும்வழி யவர்களுக்குச் சொல்லித்தர வந்திருக்கிறோமென்று சுருதி வசனங்களை சரமாரியாகப் பொழிந்து பிரசங்கஞ் செய்தார்கள். உள்ளுணர்வும் ஸ்வானுபவசாரமுமில்லாத கற்றறிமூடர்களான பண்டித சிகாமணிகள் சுருதி வசனங்களைக்கண்டு மயங்குவதுண்டு. இந்த சூக்ஷமமறிந்தே, புத்திசாலியான அவர், ஆசாரச் சீர்திருத்தங்களுக்கு விரோதமாக விருப்பதாகக் காட்டிய பண்டிதர்களை "சுருதி வசனங்கள்" என்கிற மோகனாஸ்திரத்தை யேவி மயங்கச்செய்துவிட்டார். ஐயோ! ஆளுக்காள் ஒருவரையொருவர் மயக்கலாம்—தர்க்கத்தில் வெல்லலாம்—குதர்க்கமும் பேசலாம்: ஆனால் இந்த வாசாவித்தை சாமர்த்தியத்தால் உண்மையை யுணர்வதுதான் கஷ்டம். "ஸநாதன தர்மம், ஸநாதன தர்மம்" என்றுசொல்லிப்பேசலாம், வாதுசெய்யலாம், விபரீதமும் விளைக்கலாம்; ஆனால் ஒரு க்ஷணமாயினும் மனதடங்க நின்று அந்த ஸநாதன தர்மத்தை யுணர்ந்துய்வதுதான் பெருங்கஷ்டமாக விருக்கிறது. உண்மையாக உள்ளபடி இந்த ஸநாதன தர்மத்தை யுணர்ந்தொழுக விரும்புவோர், தற்போதத்தால் அது எட்டாது கண்டு, கல்லுங் கரைந்துருகக் கருணைக கழுதிருக்கிறார்கள்.

"பாடாது பாடிப் படித்தளவில் சமயமும் - பஞ்சுபடு சொல்லனிவனைப்
பார்மினோ பார்மினோவென்று சபைகூடவும் - பரமார்த்த மிதுவென்னவே"

சந்திரவர்க்கர் வாக்சாதுர்யமாகப் பேசினார். ஆனால் அவர் சொல்லியபடி ஸநாதன தர்மத்துக்கும் விதவாவிவாகம் பந்தி போஜனம் முதலிய ஆசாரச் சீர்திருத்தங்களுக்கும் உள்ள

நேர்சம்பந்தம்தான் *விளங்கவில்லை. குருநாதனை நினைந்து "ஐயனே! இதுவென்ன கோணங்கிக் கூத்து!" என்று கேட்போமெனின், "சொல்லால் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச் சும்மாவிரு" வென்றருளின அருள்வாக்கு வாய்திறக்க விடாது மனதைவிழுங்கி நிற்கிறது! "போதிப்பதல்லாது சும்மாவிருந்தருள்பொருந்திடாப் பேதை"யாயிருந்துழன் றயர்ந்து நலிந்தது போதும் போதுமென்று நெஞ்சம் பறையறைந்து துடிக்கின்றது. ஆதலால் "எக்காலமுந் தனக்கென்ன வொருசெயலிலா-வேழை நீ" யென்றுபோதித்து "எனதாவி யுடல் பொருள் மௌனியாய் வந்து கையேற்று நமதென்ற" அருள்மொழி கேட்டு "மனமில்லை"யாகி அருள்வழிப்பட்டு நிற்பதே நிலையாகக் கொண்டு நிற்போம்.

சென்னையில் அன்னிபெஸன்ட் அம்மாள் பல்லாயிரம் ஜனங்கள் கூடிய கூட்டத்தில் இந்தியா முன்னுக்கு வருவதெப்படியென்று கீதா ரகஸியத்தை அனுபவத்திலமைத்து எல்லாருமானந்த பரவசமாகப் பிரசங்கமாரி பொழிந்தனர். அவர் சொன்ன ஒருசொல் இக்காலத்து இங்கிலீஷ் படித்தவர்களுக் கேற்றதாகப் பச்சைமரத்தாணிபோல் பதியப்பெற்றோம். அது என்னவெனில்: "ஆங்கிலேயர் கலைஜ்ஞானமும் ஆரியர் விஜ்ஞானமும் பொருந்தப் பொருத்தல் வேண்டும்" என்பதேயாம். இதன் அவசியத்தை யுணர்ந்தே இந்த நான்கு வருஷகாலமாக இதே தொழிலாக விவேகசிந்தாமணியில் இரண்டும் பொருந்தப் பொருத்திக்காட்டி வருகிறோம். திருவருளை முன்னிட்டு இத்தொழிலை "நான் எனதென்கிற" அகந்தையற்று அருள்வழிப்பட்டியற்றி வருவோம்.

ஓம்தத்ஸத்.

## "HANGED BY CONVICTION."

(*From the French of Eugene Chavette.*)

## "கோபுரத்தின் மேலேறிய குரங்கு"

அல்லது

## "மனதார மரணதண்டனைக் குடன்பட்டவன்."

பிறகு தெற்கு வீதியில் சிவதர்மதீக்ஷதர் வீட்டைநோக்கிச் சென்றார். தெற்கு கோபுரத்தில் கட்டியிருந்த காற்றாடி "ஓம்ஸ்ரீமௌனகுருப்யோநம:" என்று ஓங்கார சுருதியில் பாடிக்கொண்டிருந்தது. வழியேபோகும் ஒரு போலீஸ் சேவகன் இவரை இரண்டு மூன்றுதரம் உற்றுப்பார்த்தான்.—"இவரைப் பார்த்தால் பழைய குற்றவாளியாகிய ராஜாவைப் போலிருக்கிறது. ஆனால் அந்தப் பயலுக்கு முகத்தில் இவ்வளவு களை எது?—இவர் யாரோ பெரியவர்—அவனைப்போல் முகஜாடை இருப்பது கூடச் குற்றமா என்ன?" என்று முணுமுணுத்துக் கொண்டே போய்விட்டான். தெருவில் போகும் பிச்சைக்காரனைக்கையில்செம்பைக்கொடுத்துகச்சேரிக்கிழுக்கிற ஸாமர்த்தியம் அவனுக்கேது? இவரும் சிவதர்ம தீக்ஷதர் வீட்டையடைந்தார். தீக்ஷதர் அப்பொழுதுதான் ஸந்தியாவந்தனத்துச்குக் கோவிலுக்குப் புறப்பட்டார். ராஜாவைக் கண்டதும் "அடே நீ எடுத்த செம்பில் நாலு மோகராக் குறைகிறதே! எங்கே!" என்றார். ராஜா அவரை நமஸ்கரித்து "சுவாமி! நான் தங்களுடைய சொத்தைத் தெரியாமல் எடுத்துவிட்டேன்! பிழையைப் பொறுத்தருளவேண்டும். நாலு மோகராவைத் தவிற பாக்கியெல்லாம் அகப்பட்டு விட்டதல்லவோ"? என்றார்.

தீக்ஷதர்: "அகப்பட்டுவிட்டது! அதற்காக?" என்றார்.

ராஜா: "இல்லை! நாலு மோகராவுக்குக் கணக்குச் சொல்லுகிறேன் என்றேன்."

தீக்ஷதர்: "கணக்குச் சொல்லுகிறாயா? நன்றாயிருக்கிறது! நான் உன்னிடத்தில் செலவழிக்சக் கொ

* ஸநாதனதர்மம் தற்போதமிழந்து தானே தானாய் நிற்பவர்க்கேயன்றி; ஆசைவலைப் பட்டவர்களுக்கல்ல; பற்றற்றவர் தர்மம் பற்றுள்ளவர்களுக்குப் பொருந்தாது. அவர்கள் முக்தர்கள்; இவர்கள் பெத்தர்கள். அவர்கள் தன்னைத்தான் வென்றவர்கள். இவர்கள் "குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யும்" அடிமைகள்.

டுத்தேனோ? அதெல்லாம் எனக்குத் தெரியாது, உன் கணக்கை நீயே வைத்துக்கொள்! எனக்கு மோகராவைக்கொடுத்தால் மரியாதையாய் சர்க்காருக்குக் காட்டிக் கொடுக்காமல் விட்டுவிடுவேன்! இல்லாவிட்டால் கச்சேரிக்குவா" என்றார்.

ராஜா "தங்கள் இஷ்டப்படி செய்யக் காத்திருக்கிறேன். ஒரு மோகராவுக்கு இதோ வால்மீகிராமாயணம்; ஸப்த காண்டம் வியாக்யானத்தோடு—இரண்டு மோகராவுக்கு இதோ சட்ட புஸ்தகங்கள்,—தாயுமானவர் பட்டணத்தார் பாடல்கள்—மூலமும் உரையும், ஒரு மோகரு சிவகாமி அம்மன் மார்பில் பதக்கத்தோடு சேர்ந்திருக்கிறது. இதற்கு வட்டிக்கு இதோ கத்தரிக்கோல், திருவோட்டுக்காய், சுரைக்குடுக்கை, பட்டாணிக்கடலை அவல், சர்க்கரை"என்று ஒன்றொன்றாகத்தன் மூட்டையிலிருந்து அவிழ்த்ததுஅலங்காரமாக வைத்துவிட்டுத் தலைப்பை உதறினார். ஒருநாளும் சிரிக்காத தீக்ஷதர் தன்னையும் மீறிக் கொஞ்சம் சிரித்தார். "என்னடா என்னைப் பயித்தியக்காரன் என்று நினைத்துவிட்டாயா என்ன? ராஜா: "இல்லை நான்தான் பயித்தியம்" தீக்ஷதர்:—"அது கிடக்கட்டும், பணத்தைக் கொடுக்கிறாயா என்ன?" என்று அதட்டினார். ராஜா "சுவாமி, சையில் இல்லை, இருந்தால் கொடுத்துவிடுவேன்!" என்றார். தீக்ஷதர் "நல்லது, நீ என்னோடு கச்சேரிக்கு வா" என்று இருவருமாகக் கச்சேரிக்குப் போனார்கள்.

போகும் வழியில் தீக்ஷதர்: "எனடா, நீ இத்தனை நாளாய் எங்கிருந்தாய்!" என்றார். ராஜா "சுவாமி, வடக்கு கோபுரத்தில்ருந்தேன்."

தீக்ஷதர்: "அதில் பிசாசில்லையாடா! அங்கே சாப்பாடு யார் போட்டார்கள்? இந்த ஊரிலேயே தானா இத்தனை நாளாயிருந்தாய்!"

ராஜா:"என்னைக் கண்டதும் பிசாசெல்லாம் பயந்தோடி விட்டன. சாப்பாட்டுக்கு இரவில் பிச்சை எடுத்தேன். இத்தனை நாளும் கோபுரத்திலேயே தானிருந்தேன்."

தீக்ஷதர்: "நீ எப்படி காவலிலிருந்து தப்பித்தோடினாய்?"

ராஜா: "இருட்டில் சேவகர்கள் அப்புறம் பார்த்துக்கொண்டிருக்கையில் குதித்தோடிப் போனேன்."

தீக்ஷதர்: "இப்பொழுது ஏன் வலுவிலகப்பட்டுக் கொண்டாய்? என்னிடமகப்பட்டால் விட மாட்டேனென்று தெரியுமே!"

ராஜா: "திருடுகிறது பிசகு என்று இப்பொழுதுதான் தெரிந்தது! அதனால்தான் தங்களிடத்தில் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு பிராயச்சித்தம் பெற வந்தேன்."

தீக்ஷதர்: "சிவகாமி அம்மன் மார்பில் ஒரு மோகரா இருக்கிறதென்று உளறினாயே அதென்ன?" என்றான்.

ராஜா: "தாங்கள் கோவிலுக்குப்போய் பார்த்தால் மோகராவைக் காண்பீர்கள்." என்றார். தீக்ஷதர்: "கச்சேரிக்குப் போனால் உன்னைத் தூக்குப்போட்டு விடுவார்களே! உனக்கு சம்மதமா?"

ராஜா: "என் சம்மதத்தை யார் கேட்கிறார்கள்! செய்த வினைகளை அனுபவித்துத்தானே தீரவேண்டும்." என்று சொல்லவே, தீக்ஷதர் "இவன் ஏதோ முன்னெல்லாம் போலில்லை; தலையை மொட்டை அடித்து தாடிமீசை வளர்த்துக்கொண்டிருக்கிறான். ஒருமாதிரியாகப் பேசுகிறான். கோபுரத்தில் பிசாசுதான் பிடித்ததோ, பிரம்மஹத்தியோ, பைத்தியமோ, என்னவோ தெரியவில்லை" என்று வியந்து கொண்டே போனார்.

இப்படி இருவருமாகக் கச்சேரி போய் சேர்ந்தார்கள். முன் விசாரித்த நியாயாதிபதியே இப்பொழுதுமிருந்தார். ஆனாலும் அவர் ராஜாவைப் பார்த்ததும் "இவன் பழைய குற்றவாளியாகிய ராஜாவைப் போலிருந்தாலும் வாஸ்தவத்தில் அவனல்லவென்று நினைக்கிறேன்" என்றார்.

தீக்ஷதர்: "மகாராஜா, நீங்கள் அப்படி சந்தேகிக்க வேண்டியதில்லை, நான் அவனைப் பார்த்த உடனே இன்னானென்று கண்டுபிடித்து விட்டேன்; அவனையே வேண்டுமானாலும் கேட்டுப்பாருங்கள், ஒப்புக்கொள்வான்" என்றார்.

கடைசியில் ராஜாவே தன்னுடைய விருத்தாந்தத்தை ஆதியோடந்தமாகச் சொல்லித் தானே பழைய திருடன் என்று ஒப்புக்கொண்டமையால், அவர்மேல் இரண்டு புதிய குற்றங்கள் ஏற்பட்டன. அதாவது: "சர்க்கார் காவலிலிருந்து தப்பித்துக் கொண்டோடினது ஒன்று, மறுபடி வலுவில் வந்து அகப்பட்டுக்கொண்டது இரண்டு; இவ்விரு குற்றங்களுக்காக அவரைக் கூடுமானால் பழைய தண்டனையையும் சேர்த்து இரண்டுதரமாகத் தூக்குப்போடும்படி தீர்ப்பாயிற்று. ஆனால் நியாயாதிபதிக்கு மாத்திரம் அந்தரங்கத்தில் அவரைத் தூக்குப்போட இஷ்டமில்லை. "இப்பொழுதே கொஞ்சம் யோக்கியனாக மாறிவிட்டான்; இன்னும் கொஞ்சநாள் போனால் முற்றிலும் யோக்கியனாகிவிடுவான்; இருந்தாலும் நாமென்னசெய்கிறது? சட்டத்தில் சொல்லியபடி தானே செய்யவேண்டியிருக்கிறது. மேலும் அவன் பழைய திருடனல்லவென்று தள்ளிவிடுவோமென்றால் அதற்கும் ருஜூ இல்லை" என்று வருத்தப்பட்டுக்கொண்டே கச்சேரி கலைத்து வீடுபோய் சாப்பிட்டுவிட்டுப் படுத்துறங்கினார். இது நிற்க,

தூக்குமேடையில் காத்துக்கொண்டிருந்த பறையன், ராஜாவை முதல் முதல் தூக்குப் போடும்படி தண்டனை விதித்தபோதே அவர் ஊர் பெயர் எல்லாம் விசாரித்ததில் அவர் பிராமண ஜாதி யென்று கேள்விப்பட்டு நடுக்கமுற்றான். "ஐயோ இந்த ஜன்மமேன் எடுத்தோம்! இந்தத் தொழிலுக்கு வந்த பத்து வருஷங்களாக இது வரையில் பிராமணனைக் கொன்றதில்லை; இன்றை

க்கு அந்தப் பாபமும் நம்மைச் சூழ்ந்து கொண்டது! இந்தத் தீரா வல்வினையுந் தீராவழியுமுண்டோ? மேலும் அவருக்கும் இளம்பிராயந்தானாமே, 25 வயதுக்குள்ளாகத்தானிருக்குமாம். அவருடைய குற்றமும் திருட்டுதானே யொழிய, கொலை விய பிசாரமில்லை; அதிலும் பகற் கொள்ளையல்ல, வீட்டிற் கன்னம் வைத்த திருட்டல்ல; ஏதோ எங்கேயோ புதைத்திருந்த செம்பை இன்னார் வைத்த தென்றறியாமல் எடுத்து விட்டதுதான். அதுவும் என்னசெலவுக்காக எடுத்தாரோ எப்படித்தெரியும்? ஒருக்கால் பசியின் கொடுமையினால் பெண்டு பிள்ளைகளையாவது வயதான ஏழைத் தாய் தந்தையரையாவது காப்பாற்றத்தான் எடுத்தாரோ என்னவோ? அல்லது சிறுபிள்ளையாதலால் கலியாணம் செய்ய நினைத்து செலவுக்கில்லாமல் எடுத்திருக்கலாம். பிராமணஜாதியாயிற்றே என்று ஏதாவது அபராதம் போட்டுக் காவலில் வைத்தாவது விட்டுவிடக் கூடாதா? நாமினி என்ன செய்வோம், நான் தூக்குப்போட மாட்டேனென்று நம்மையே தூக்குப் போட்டுக் கொள்வோமா? அப்படிச் செய்தால் பத்து மாதக்காரியாகிய நம் பெண்டாட்டியும் கூட வந்துவிடுவாள். அந்தப் பாபமும் நம்மைச் சேரும்! ராஜா என்று அவர் பெயரைக் கேட்டாலே காதிற்கின்பமாயிருக்கிறது! அவரை நேரிற்பார்த்தால் எப்படியிருப்பாரோ? ராஜாவாய்ப் பிறந்து கடைசியில் என்னிடத்திலா வந்து சேரவேண்டும்!" என்று நினைக்கும்பொழுதே அந்த ராஜா என்பவர் தனக்குக் கூடப்பிறந்த தம்பிபோல் திடீரென்று பறையன்மனதிற்பட்டது!

"சே! இதென்ன பயித்தியக்கார எண்ணம்! அவர் பிராமணன் நான் பறையன், அவராவது எனக்குத் தம்பியாவது! கனவு கண்டோமா என்ன?" என்று அவ்வெண்ணத்தை மனதை விட்டுத் தள்ளித்தள்ளிப் பார்த்தான். அது இவனை விடவில்லை.

"இதேதடா கஷ்டகாலம்! நம் தம்பியை நாமே தூக்குப்போடுகிறதா.?—தம்பியாயிருந்தாலும் பிசகிப்போனவர்களைத் தண்டிக்கத்தானே வேண்டும்!—அதற்காகக் கொல்லவேண்டுமோ? சிறுபிள்ளைகளை நல்ல வார்த்தையாய் புத்திசொல்லி சொற்ப தண்டனைவிதித்து, மறுபடி பிழைசெய்தால் இன்னும் அதிகமாய் தண்டனைவிழும் என்று அதட்டி விட்டுவிட்டாற்போதாதா? ஆனால்இந்த யோசனைகள்தான் நமக்கேன்? நமக்குக் கடவுளிட்ட வேலையை நாம் செய்வோமே? இத்தனைநாளாய் 555பேர்களைக்கொன்றோமே, அப்பொழுதெல்லாம் இவ்வளவு யோசித்தோமா?—சடவுளிட்டவேலை இன்னதென்று முதலில் தெரிந்து கொண்டாலல்லவோ அப்புறம் அதை செய்யலாம்; மேலும் கடவுள் அப்பொழுதெல்லாம் இவ்வளவு யோசனைகளைப் பிறப்பிக்கவில்லை, இப்பொழுதுதான் பிறப்பிக்கிறார்; ஆதலால் எல்லாவற்றிற்கும் அவசரப்படாமல் அந்தப் பிராமணப்பிள்ளையைக்கண்டு அவனையே நமக்குக் கண்கண்ட கடவுளாகப்பாவித்து தெண்டனிட்டு அவரிடம் உத்தரவு பெற்று மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அவர் சம்மதித்தால் அவரைத் தூக்குப்போடுவோம் அதிக கஸ்திப்படுத்தாமல் கண்மூடிக் கண்திறப்பதற்குள் சாகும்படி தூக்குப்போடுகிற சாமர்த்தியம் நமக்குண்டு. இல்லாவிட்டால் மறுத்துவிடுவோம்; தலை போனாலும் போகிறது! பிறகு ஆண்டவன் விட்டவழி" என்று தீர்மானித்தான்.

அன்று சாயந்திரம் ராஜா தப்பிததுக் கொண்டோடிவிட்டார் என்று கேள்விப்படவே பறையனுக்கு வெகு சந்தோஷமாயிற்று. இருந்தாலும் தலைவலிபோகத் திருகுவலி என்று வேறொரு துக்கம் வந்தது! "ஏதோ நம்மைப்பிடித்த நல்லகாலம்தான் கடவுள் நம்மை இந்தப்பாபத்தினின்றும் நீக்கினார்: ஆனாலும் நாம் அவரைக்கண்டு தெண்டனிட்டு ஒரு வார்த்தைபேச ஆசைகொண்டிருந்தோம். அது கிடைக்கவில்லை. பறையனாய்ப்பிறந்த நமக்குப் பிராமணரைக்கும்பிட்டால் அதுவே புண்ணியம்; நம்கண்ணில் எந்த பிராமணர் அகப்படுகிறார்? அதுவும் கொலைகாரனைக் கண்டால் எல்லாரும் கண்காணாது விலகிப்போவார்கள். அப்படியிருக்கப் பிராமணனோடு பேசவேண்டுமென்றால் எப்படி முடியும்? நமக்கு இப்படி வலுவில் கிடைதத பிராமணரும் ஓடிப்போய் விட்டாரே! எங்கேபோய்க் கஷ்டப்படுகிறாரோ, பட்டினி கிடக்கிறாரோ, சாகிறாரோ, என்னவோ?" என்று எண்ணுகையில் மறுபடியும் அவர் தனக்கு முன்சன்மத்திலாவது உடன் பிறந்திருத்தல் வேண்டுமென்கிற எண்ணம் முன்னிலும் பத்துமடங்கு அதிக தீவிரமாய் உண்டாயிற்று.

வீடுபோய்ப் படுத்தபிறகும் இரவெல்லாம் அவனுக்கு ராஜா ஞாபகமாகவே இருந்தது. "அவர் இருக்கிற இடந்தெரிந்தாலும் அவரைக்கண்டு வரலாம். பசிக்குக் கொஞ்சம் பாலும் பழமுமாவது அவருக்கு சம்பாதித்து கொடுக்கலாம்." என்றெண்ணினான்.

இப்படி இரண்டு மூன்று மாதங்களாயின. நாள் செல்ல செல்ல பறையனுக்கு ராஜவைக் கண்ணாலாவது பார்க்கவேண்டுமென்கிற ஆசை விருத்தியாய்க் கொண்டே வந்தது தன் பெண்டுபிள்ளைகளிடத்தில் வைத்திருந்த ஆசையெல்லாம் விட்டுவிட்டான். யாராவது "ராஜா"வென்று சொன்னால் இவனுக்கு உடனே மயிர்க்கூச்செடுக்கும்; சுற்றும் முற்றும் பிரமித்துப் பார்ப்பான். தனியே இருக்கும் சமயங்களில் சந்தடி செய்யாமலழுவான். பிறகுதான் அழுததைக் குறித்துத் தானே ஆச்சரிசப்படுவான். "இதென்ன எழவாயிருக்கிறது, நமக்குப் பயித்தியந்தான் பிடிக்கிறதோ என்னவோ தெரியவில்லை, அல்லது யாராவது சுக்குப்பொடிதான் போட்டுவிட்டார்களோ? அவர் யார், நாம் யார், அவர் பிறந்து வளர்ந்ததென்ன, நம்முடைய ஜன்மமென்ன, ஒருவரையொருவர் முன்பின் பார்த்ததில்லை! அவர் நம்மைப்பற்றிக் கேள்விப்பட்டதில்லை. நாமிருக்குமிடம்கூட அவருக்குத் தெரியாது! நாமிப்படி அவரைக் குறித்தழுகிறோம் என்று அவர் கனவிலும் நினையார். அப்படி நினைத்தாரானால் அதுவே நமக்

குப்போதும்; நாம் அவரைப் பார்க்காவிட்டாலும் போகிறது! இங்கே ஏழையொருவன் இருக்கிறேன் என்றவரறிந்தால்போதும்! ஆனல் ஒருவரையொருவர் முன்பின் பாராவிட்டாலென்ன? எங்கே பிறந்தாலென்ன? எங்கே இருந்தாலென்ன? சேற்றிற் பிறந்து புதிதாய்க் கண்விழிக்கும் தாமரை மொட்டிற்கும் இவ்வுலகத்தை இமை கொட்டாது பாதுகாத்துக்கொண்டு வானத்தில் வசிக்கும் சூரிய பகவானுக்கும் முன்பின் என்ன சம்பந்தம்? அவரைக் கண்டவுடன் அந்தப்பூ சந்தோஷமாய் மலருவானேன், அவர் அஸ்தமித்தால், பூவும் வாடிப்போவானேன்?'' என்று யோசிப்பான்.

இப்படி இப்பொழுது ஆறுமாத காலமாயிற்று. முதல் கொஞ்சநாளைக்கு ராஜாவின் நடத்தையைப் பற்றி ஆச்சரியமாய்ப் பேசிக்கொண்டிருந்த உலகத்தார்கூட அவன் பெயரை இப்பொழுது முற்றிலும் மறந்து விட்டார்கள். இந்தப் பறையனொருவனே அவரை மறக்காதிருந்தான். அவனுக்கு உலகவாழ்வு அலுத்துப்போய் விட்டது. இன்னும் ஒருவாரத்துக்குள் ராஜாவைப்பற்றி ஒரு சமாசாரமும் தெரியாவிட்டால் தன் உயிரை மாய்த்துக் கொள்ளுகிறதென்று தீர்மானித்து விட்டான். ராஜாவை சந்துபொந்துகளிலெல்லாம் தேடிப்பார்த்தான், கண்டபேர்களிடமெல்லாம் விசாரித்தான். ஒன்றும் ஏற்படவில்லை. ராஜா கோபுரத்தை விட்டிறங்கின தினம் தான் அந்தப்பறையன் வைத்தகெடுவில் கடைசிநாள், அன்றிரவு முழுவதும் தூககுமரத் தண்டையே பதுங்கி இருந்து சூரியோதயமானதும் ஜனங்கள் வெளிக்கிளம்புவதற்குமுன் தூக்குப் போட்டுக் கொள்ளுகிறதென்று தீர்மானித்தான். வீட்டில் பெண்டாட்டியினிடத்தில் சொல்லிக்கொள்ளவில்லை. அஸ்தமித்து ஜாமம் வரையில் தூக்குமாத்தடியில் அவன் காத்துக்கொண்டிருக்க வேண்டிய கடமையாதலால் முதல் ஜாமம் எப்பொழுது அடிக்கும் என்று காத்துக்கொண்டிருந்தான்.

இதற்குள்ளாக ராஜாவை முன்போல் தூக்குமேடைக்கு வண்டியில் கொண்டுபோகாமல் நடத்தி அழைத்துக்கொண்டு போனர்கள். இரண்டு சேவகர்கள் போதாதென்று இருபதுசேவகர்கள் தீவட்டி மத்தாப்பூ வெளிச்சத்துடன் பின்சென்றார்கள். கொஞ்சம் கும்பலைக் கண்டவுடன் இன்னும் அதிகமாகக் கும்பல் சேர்ந்து—ஊர் ஜனங்களெல்லாம் பின்தொடர்ந்து சென்றார்கள். சிறு கன்னிப்பெண்கள் ராஜாவின் அழகையும் காந்தியையும் கண்டு "இப்பேர்ப்பட்டசுந்தரபுருஷனைத் தூக்குபோடலாமா" என்று அழுதார்கள். வயதான கிழவிகள் கண்ணீர் ததும்ப "அப்பா! ராஜாவென்றால் உனக்கே தகும்" என்றார்கள். சுத்தவீரர்களான சிப்பாய்கள் "நாம் சண்டைவெறியில் பேரிகைகள் முழக்கத்தில், பிறர் பழிக்கப் போகிறார்களே என்றும், பின்வாங்கினல் பிறகு அவமானத்தோடுகூடத் தலையையும் இழக்கவேண்டுமே என்று பயந்தும், சண்டைமுனையில் உயிரை மாய்த்துக்கொண்டு, அதை தைரியம் என்கிறோம். இந்த மஹாபுருஷனைப்பார்! கலங்கா நெஞ்சத்தனாய் முகம் கொஞ்சமேனும் வேற்றுமைப் படாது சாவகாசமாய் நிதானமாய் பரபரப்பு, கோபம், சலிப்பு இவையொன்றுமில்லாது, கேட்பவர்களுக்கெல்லாம் புன்சிரிப்போடு பதில் சொல்லிக்கொண்டு செல்கிறார் இதல்லவோ சரியான தைரியம். இவரைப்பார்த்தால் யாராவது தூக்குப்போட்டுக் கொள்ளப்போகிறார் என்று நம்புவார்களா? ஊர்கோலம் வருகிற மாப்பிள்ளைபோலிருக்கிறதேயொழிய வேறொன்றுமில்லை இந்த தீவட்டிகளின் வெளிச்சம் வெளிச்சமாகத் தோற்றவில்லை. அவருடைய முகத்தின் வெளிச்சமல்லவோ இவ்வளவு தூரம் வீசுகிறது'' என்றார்கள். குழந்தைகளை இடுப்பில் வைத்த மாதர்கள் "என்கண்மணியே, அதோ போகிறாரே பெரியவர் அவரைக் கும்பிடு'' என்றார்கள்.

இப்படி தூக்குமேடை போய்ச் சேர்ந்தார்கள். அன்று பூர்ணிமை. சந்திரோதயமாகி இரண்டு நாழிகை இருக்கும். ராஜா வருகிறார் என்று கேள்விப் பட்டவுடனே பறையனுக்கு சந்தோஷம் கரையில்லாமல் பெருகிற்று. "நானங்கே வருகலாமோ,'' என்று நந்தனர் புலம்பியதுபோல் "பூமியிற் பறையனாய்ப் பிறந்தேனே, புண்ணியம் செய்யாமலிருந்தேனே, பரம கிருபாநிதியல்லவோ, இந்தப் பறையனுபசாரம் சொல்லவோ'' என்று அலறியழுதான். ராஜாவும் தூக்கு மேடைக்கு வந்தார். இருவரும் க்ஷணகாலம் ஒருவரையொருவர் ஏறிட்டுப் பார்த்தார்கள். தேனும் பாலும் போல் இருபார்வையும் க்ஷணகாலம் ஒன்றாய்க் கலந்து ராஜாவைப் பார்த்தால் தான் வெகு நாளாய் நேசித்து நடுவில் மறந்திருந்த தம்பி போல் பறையனுக்குத் தோன்றிற்று அவரை அப்படியே கட்டி அணைத்து முத்தமிட வேண்டும் போலிருந்தது. ஆனல் தான் பறையனுதலால் அவரைத் தொடக் கூடாதென்றெண்ணி சும்மாவிருந்தான். அவர் அப்படியே ஓடிவந்து அவனைக் கட்டிக்கொண்டு "எனக்குற்றார் உறவினர் எல்லாம் நீ தான். உலகத்தில் ஒருவரும் கவனியாது அனாதையாய் விட்டு விட்ட தத்தாரிப் பிள்ளையாகிய என்னை நீ ஒருவனல்லவோ உன்உள்ளத்திலிருத்தி என்னுள்ள முருகிக் கள்ளம் கரையச் செய்தாய். உன் சித்த சுத்தியல்லவோ இந்தப் பாழானவென் மனதை சுத்தி செய்தது.—இனி உன் வேலையைப் பார்-உன் கையாலிறக்க பாக்கியம் பெற்றேனே'' என்று விம்மி நின்றார்.– பறையன் உடனே அவரை சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து "சுவாமி, ஏழையின்பேரில் தயவு செய்ய வேண்டும். எவ்வளவோ பாபம் செய்து இந்தப் பறை ஜன்மமெடுத்திருக்கிறேன். இனி இந்தத் தொழிலை விட்டு என்னை நீக்க வேண்டும். உங்கள் முகத்தைக் கண்டவுடனே தான் என் பாபமெல்லாம் தொலைந்தது. அப்பேர்ப்பட்ட உங்களைத் தூக்குப் போடுகிற வேலையை ஒப்புக்கொண்ட அபசாரத்திற்காக நீங்களல்லவோ என்னைத் தூக்குப் போட வேண்டும். தாங்கள் என்னிடம்

வைத்திருக்கிற தயவில் நூற்றிலொரு பங்கு யாராவது இதுவரையில் என்னிடம் காட்டியிருந்தால் நான் அன்றைக்கே இந்தத் தொழிலை விட்டிருப்பேன். போனது போகட்டும் - இன்றோடு இந்த ஜன்மத்தை ஒழிக்கிறேன்'' என்றழுதான். இதைப் பார்த்திருந்த ஜனங்களெல்லாம் ஒன்றுந் தோன்றாமல் சித்திரத்திலெழுதிய பொம்மைபோல் பிரமித்து நின்றார்கள். அங்கிருந்த போலீஸ் சேவர்களில் சிலர் "என்னடா பயலே தாறுமாறாய் உளறுகிறாய், தலை போய்விடும். ஜாக்கிரதை – எழுந்து உடனே உன் வேலையைச் செய்கிறாயா என்ன'' என்று அதட்டினார்கள். ஒருவன் "பறையனுக்கும் பயித்தியம் பிடித்துவிட்டதா என்ன? ஒரு ஊரில் இரண்டு பைத்தியக் காரர்களா? என்றான். இன்னொருவன் "இவர்களுக்குள் ஏதோ ரகசியமிருக்கிறது'' என்றான். வேறொருவன் "ரகசியமாவது மண்ணாங்கட்டியாவது! எல்லாம் அந்தப் பார்ப்பானுடைய தந்திரம்—பேச்சினாலல்லவோ மயக்கிவிட்டான்! கெட்டிக்காரன்'' என்றான். பகலில் இவரைத் தெருவில் கண்ட சேவகன் மட்டும் "அப்படி மயக்குகிற தென்றால் இவ்வளவு தூரம் வந்து தானே குற்றத்தை ஒப்புக்கொள்வானேன்? அதெல்லாம் ஒன்றுமில்லை, நான் அவரைப் பகலிலேயே பார்த்தேன். அவரை எனக்கு அடையாளம் தெரியவில்லை. அவர் முகத்தில் ஏதோ திவ்ய ஜோதி விளங்குகிறது'' என்றான். ராஜாவும் அவனைத் தூக்கி எடுத்து "அவனவன் வேலையை அவனவன் செய்தாலல்லவோ உலகம் நடந்தேறி வரும்! ஆதலால் நீ இப்படியெல்லாம் அறியாமையினால் வருந்துவதில் பிரயோசனமில்லை! சீக்கிரம் உன் கடமையை நிறைவேற்று!'' என்று தன்னாலியன்றமட்டும் சொல்லிப் பார்த்தார். பறையன் கேட்கிற வழியாயில்லை. "சுவாமி உங்கள் கையால் இந்த ஜன்மம் நீங்க வேண்டுமென்று ஆசைகொண்டிருக்கிறேன் அப்படி உங்களுக்கு தயவில்லாவிட்டால் இன்னும் கொஞ்ச நேரத்திற் கெல்லாம்—ஸர்க்கார் சேவகர்களே என்னைச் சுட்டுவிடுவார்கள்!'' என்றான். இதற்குள் சில சேவகர்கள் நியாயாதிபதியினிடத்தில் சமாசாரத்தைத் தெரிவித்து அவர் உத்தரவைக் கேட்டுவரப் போனார்கள்.

இதற்குள் சிவதர்மதீக்ஷிதர் குப்பலை விலக்கிக்கொண்டு "தூக்குப் போடாதே, நிறுத்து, நிறுத்து, அவசரப்படாதே'' என்று மேல்மூச்சு வாங்க ஓடி வந்தார். அவர் சாயந்திரம் கச்சேரி கலைந்ததும் கோவிலுக்குப் போய் ஸந்தியாவந்தனம் செய்துவிட்டு ராஜா சொன்னபடி தன் மோகரு அம்மன் பதக்கத்திற்கு பக்கத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறதா என்று ரகசியமாய்ப் பார்த்துவரப் போனார். அங்கே அர்ச்சனை செய்வதற்காக பழம் தேங்காய் வைத்துக்கொண்டு காத்திருந்த ஒரு ஸ்திரீயினிடமிருந்து அவைகளை தக்ஷிணையோடு பெற்றுக்கொண்டு அர்ச்சனை செய்வதற்காக அம்மன் சமீபத்திற் போனார். அர்ச்சனை செய்துகொண்டே மார்பில் சாத்தியிருந்த ஆபரணங்களை நோக்கினார். அதில் ஒரு மோகரு கோர்த்திருந்தது. ஆனால் அதில் எல்லா மோகருக்களிலுமுள்ள ராஜாங்க முத்திரை யில்லாமல் "சிவ தர்ம ராஜா'' என்று முத்திரையோடு கர்நாடக நவாப் உருவத்திற்கு பதிலாகத் தன்னுருவம் பதிந்திருக்கக் கண்டார். மோகருவின் பின்புறத்தைத் திருப்பினார். 50 வருஷங்களுக்கு முன்னிறந்துபோன தன் தாயினுருவம் தலையிலொரு புல்லுக்கட்டை வைத்துக்கொண்டிருக்கக் கண்டார். அம்மன் முகத்தைப் பார்த்தார். வெகுநாளாய் மறந்திருந்த தன் தாயின் முகம்போல் விளங்கிறது. உடனே கை கால் நடு நடுங்கிற்று. கையிலிருந்த தாம்பாளத்தை அப்படியே நழுவவிட்டார். "பிறவிக் குருடனாய்ப் போனேனே'' என்றழுதார். அப்படியே ஓட்டமாயோடி தூக்குமேடை வந்துசேர்ந்தார். ராஜாவை காலில் விழுந்து நமஸ்கரித்தார். "சுவாமி உங்களுக்கு வெகு அபசாரங்கள் செய்துவிட்டேன்'' என்றார். உடனே அங்கிருந்த சேவர்களைப் பார்த்து "நான்தான் நிஜத்திருடன் என்னைத் தூக்குப் போடுங்கள்–நிரபராதியான ராஜாவைக் காட்டிக் கொடுத்ததற்காக இரண்டுதரத்துக்கு இருபதுதரம் தூக்குப் போடுங்கள். அவரை விட்டு விடுங்கள்'' என்று கதறினார். ராஜா அவரைத் தூக்கி எடுத்து "சுவாமி தாங்கள் பெரியவர்கள் என்னை நமஸ்கரிக்கக் கூடாது. தாங்கள் எனக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை. நானல்லவோ உங்கள் சொத்தைத் திருடி எனக்கு பாபத்தை சம்பாதித்துக் கொண்டேன். தாங்கள் என்னைக் காட்டிக் கொடுக்கவில்லையே! நானல்லவோ பிராயச்சித்தம் பெறவேண்டி வலுவிலகப்பட்டுக் கொண்டேன்'' என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே நியாயாதிபதி குதிரை வண்டியில் வெகு வேகமாய் வந்திறங்கி "நிறுத்து, தூக்காதே தூக்காதே'' என்று கதறினார்.

அன்றிரவு அவர் படுக்கைக்குப் போயும் அவருக்குத் தூக்கம் பிடிக்கவில்லை கொஞ்சங் கண்ணயர்ந்தவுடனே ஒரு கனவு கண்டு விழித்துக் கொண்டார். கனவில் ஒரு வெண்பட்டுடுத்தமாது, இறந்துபோன இரண்டு வயதுக் குழந்தையைக் கையிலெடுத்துக் கொண்டு "இப்படி அறியாக் குழந்தைகளைச் சிசுஹத்தி செய்யலாமா'' என்று கெஞ்சிக் கேட்பது போலிருந்தது. விழித்துக்கொண்டு அதன் தாத்பரியம் என்னவென்று யோசிக்கையில் தூக்குமேடையில் நடந்த விருத்தாந்தத்தை நாலு சேவகர்கள் ஓடிவந்து சொல்லி உத்தரவு கேட்டார்கள். உடனே அவரும் வண்டி போட்டுக்கொண்டு வந்து சேர்ந்தார் வந்து பறையனைப்பார்த்து "என்னடா உன் வேலையைச் செய்கிறாயா, உன்னை சுட்டுவிடச் சொல்லவா?'' என்று அதட்டினார்.

அவன் "மகாராஜா, தாங்கள் என்னை சுட்டுவிடச் சொல்லுங்கள் அதுவேசரி. என் தலைபோனாலும் நான் அவரை விரலால் தீண்டவுமாட்டேன் நான் பறையன், அவர் பிராமணர்'' என்றான்.

(இன்னும்வரும்) ஸ்ரீ ராஜநாயகி.

## The Children's Tribute of Love To Her Royal Highness The Princess of Wales.

"LET THE CHILDREN COME UNTO ME"

Her Royal Highness the Princess of Wales has been graciously pleased to accept a specially bound copy of the Life of Her Majesty Queen Victoria (published in the "*Vivekachintamani Series*") as a token of the CHILDREN'S TRIBUTE OF LOVE AND AFFECTION to Her Royal Highness, which was sent with a letter conveying the sentiments of their mothers and sisters at home. Miss C. V. Swaminathaiyar has received the following gracious reply addressed to her mother.

GOVERNMENT HOUSE, January 28, 1906.

"The Lady in Waiting presents her compliments to Mrs. C. V. Swaminathaiyar and is desired by Her Royal Highness the Princess of Wales to thank her very gratefully for her kind letter and to say that it will give her Royal Highness much pleasure to accept the copy of the Life of Her Majesty Queen Victoria which she so kindly offers her"

## மேன்மை தங்கிய இராஜாத்தியவர்களும் குழந்தைகளும்.

மகா மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசியாரவர்கள் கோஷா ஆஸ்பத்திரிக்கு விஜயமாய் திருவல்லிக்கேணிக்கு வந்தபொழுது ஒரு சிறுவனுக்கு குதிரையின்கால் பட்டு முகத்தில் காயம்பட, அதையறிந்த இளவரசியார் அச்சிறுவனிடத்து அன்பும் ஆதரவும் வைத்துத் தாயன்பு காட்டி அவன் காயத்தைக் கட்டி அவனுக்குச்சிகிச்சை செய்ய உடனே கவர்னரவர்களுடைய ஸர்ஜியனையனுப்பி ஆதரவாய் விசாரித்துவந்தார். இந்த சமாசாரம் ஊரெல்லாம் பரவி. குழந்தைகளும், பெண்டீர்களும், இராஜாத்தியின் தாயன்பையும் கருணையையும் கண்டும் கேட்டும் ஆனந்தித்து அவரைத் தங்களிலொருவராகக் கொண்டாடி வந்ததையுணர்ந்தும், ஒரு சிறுவன் "இராஜாத்தி மனசு நல்லமனசு. நல்ல அம்மாள்; நம் அம்மாளைப்போல நான் அவரை நேசிக்கிறேன்" என்று அன்புருகிப் பேசிக்கொண்டிருந்ததைக்கேட்டும், இப்படியே யாவரும் அவர் உள்ளன்பைக் கொண்டாடினதையும் மேன்மைதங்கிய இளவரசியாருக்குத் தெரிவித்து, பாலர்கள் அவரிடத்து வைத்துள்ள அபூர்வ அன்புக்கு அறிகுறியாக அச்சிறுவன் கோரியபடி விசேஷ பைண்டுசெய்த விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திரம் ஒன்றையனுப்பி அதை இளவரசியார் எற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்க, மேன்மைதங்கிய இளவரசியாரவர்கள் உடனே யதையேற்றுக்கொள்ள மனமுவந்து அவரது தோழிப்பெண் மூலமாகத் தம்உள்ளக் கருத்தைத் தெரிவிக்கலானார் அவர் தம்தோழிப்பெண் மூலமாய் விடுத்துத் தன்தாயார் பேரால் வந்த கடிதத்தை ம-ா-ா-ஸ்ரீ ஸி. வி. ஸ்வாமிநாதையர் குமாரத்தி பெற்றுக்கொண்டு மேன்மைதங்கிய இளவரசியாருக்கு வந்தனமளித்து விடைபகர்ந்துள்ளார். மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசியவர்கள் தாயன்போடு குழந்தைகள் தம்மிடம் வைத்த பிரீதியை யங்கீகரித்தெழுதிய கடிதமிது:—

கவர்ன்மேண்டவுஸ். 1906. ௵ ஜனவரி௴ 28௳

"மகா மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசியாரவர்களின் தோழிப்பெண் (Lady-in-Waiting) மிஸ்ரஸ் ஸி. வி. ஸ்வாமிநாதய்யருக்கு உபசாரங்கூறி யெழுதிக்கொண்டது: 'மகா மேன்மைதங்கிய இளவரசியாரவர்களுக்கு ப்ரீதி பூர்வகமாய் எழுதின கடிதத்தை அவர் நன்குணர்ந்து பாராட்டி அதற்காகத் தங்களுக்கு வந்தனமளித்து, நீங்கள் பக்ஷமுடன் அளிக்கும் மாக்ஷிமைதங்கிய மஹாராணியார் சரித்திரத்தை யேற்றுக்கொள்ள மேன்மை தங்கிய இராஜாத்தியவர்கள் மிகவும் மனமுவந்தவர்களாயிருப்பதைத், தெரிவிக்கும்படி ஆஜ்ஞாபிக்கிறார்.'"

இக்கடிதம் சிறுவர்களும் குடித்தனப் பெண்டீரும் மேன்மைதங்கிய இளவரசியவர்களிடத்து ஹிருதயபூர்வகமாகப் பாராட்டிய உள்ளன்பையுணர்த்தி யெழுதியதற்குப் பதிலாகக் கிடைத்ததால் இது அவர்கள் எல்லாருக்குமே செய்த உபசாரமாகக் கொள்ளத்தக்கது. இதனால் "அன்புக்குமுண்டோ அடைக்குந்தாழ்" என்னும் திருவள்ளுவர் திருவாக்கு உண்மையாமென்பது உணரத்தக்கது.

## IN COMMEMORATION OF THE ROYAL VISIT.

### வேல்ஸிளவரசர் இளவரசியார் சென்னைக்கு விஜயம் செய்தது.

காப்பு-வெண்பா

வெண்கமல நாண்மலராள் வேல்ஸரசர் தம்வரவிற்
கொண்டமிழிற் பஞ்சரத்ந மொன்றுதவத்—தண்சரண
பங்கயங்க டந்தருளும் பைந்தமிழிற் கொஞ்சுமொழி
தங்குமெழி லெங்குமிகுந் தான்.

பஞ்சரத்நம்.
(ஆறுசீராசிரியம்.)

சீரோங்க மகராணி யரசாண்ட சீர்மைநாம் செப்ப லரிதே
பேரோங்க விசையோங்க வயதோங்கி மேன்மைசேர் பெண்ணின் முடிகொள்
தாரோங்கு மேழாவ தெட்வர்டின் தநயராம் வேல்ஸி னரசர்
நேரோங்கு மரசியொடு சென்னைநகர் நேர்ந்ததிது நேர்மை காணே. (1)

பச்சென்ற தோரணம் மிருபுறமு மசையவே பற்பல் கொடிகள்
மச்சினுனி கடலருகு பன்னிறம் வாய்ந்தொளிர்த லேற்ற காட்சி
கச்சொன்று மிளமாதர் நகருளோர் கனவரசர் கண்கள் குளிர
அச்சங்க ளணுவின்றி யூர்கோல மாட்சியிது கண்ட தழகே. (2)

நாடாளு மரசரின் மைந்தரா மிவர்பெருமை நவிலில் முனநாள்
காடாள நின்றவரை நாடாளு வித்தவர்கள் கருணை வடிவே
ஈடாக வந்ததிது பெண்ணரசி தன்னோடே இனிய தமிழ்நாட்
டோடாக நாடிவரு காட்சிபெறு மாட்சியா லுரிய தாச்சே. (3)

பெற்றோர்கள் படமொளிரு பெரியதோர் கோபுரக் காட்சி மீதால்
கற்றோர்கள் புகலரிய பதுமையெழி லாதிமலி காட்சி யோங்க
இற்றோறு மெழில்பெறுங் கோலங்க ளெண்ணிலா தமையு மென்றால்
உற்றோரு மற்றோரு மகிழ்வுறுங் காட்சிநல மோத லரிதே. (4)

சென்னைநகர் மாந்தர்தம் முகமதாங் கமலமலர் சேர்ந்து மகிழ
வன்னையொடு தந்தையா ரன்போ டளித்ததொரு சூரி யன்றான்
துன்னியொளிர் திங்களோ டொருபகல் வந்ததாச் சொல்ல லாமால்
நன்னயம தாமரசர் குடிகளின் நடையொளிரு பண்பு மீதே. (5)

வாழி.

வாழி யாங்கிலர் மாட்சியு நித்தமே
வாழி வேதியர் மங்கையர் மாட்சியே
வாழி யேழனு மாட்சியெட் வார்டுமே
வாழி வேல்ஸிள மன்னொடு தேவியே.

ஸென்[illegible]சாலை
சென்னை.

தி. வேங்கடராம ஐயங்கார்.

## THE ROYAL VISIT TO MADRAS.—SOME NOTES AND REFLECTIONS.

### ROYAL ASSURANCES OF LOVE AND AFFECTION.

*Extracts from the Prince's Replies.*

"We have looked forward with pleasure to visiting your old and historic City, which I believe to be our oldest possession and oldest Municipality in British India.................... Though thirty years have elapsed since he was your guest, my dear father's recollections of Madras are still vivid and happy"—*H. R. H's Reply to the Corporation.*

"Everywhere we have had proofs of the same loyal sentiments, but nowhere has it been more eloquently expressed than here in Southern India ....Already the Princess and I begin to feel that we are at home and that we uuderstand much that no books and no amount of study would have revealed to us. We both recognise the serious importance of our mission to India, and we pray that it may be frutitful both to you and to us"—*H. R. H's Reply to the Landholder's Deputation.*

"We both of us do feel a 'deep concern' and 'lively interest' in all that affects the welfare of our fellow-subjects. We fully realise the privelege which we are now enjoying of seeing these distant parts of the Empire, and are most grateful for the affectionate manner in which Southern India has greeted us.. ...We shall be most grateful if you will tell your friends when you return home that your Address in no way exaggerates the interest and love which we have for this great country and its people."—*H. R. H's Reply to the Presidency Address.*

## மேன்மை தங்கிய வேல்ஸ் இளவரசர் இளவரசியாரின் விஜயம்

—:(*):—

நமையாளும் எட்வர்ட் அரசரின் ஜேஷ்ட புத்திரரும் அவருக்குப்பின் பட்டத்துக்குரியவருமாகிய மேன்மைதங்கிய ப்ரின்ஸ்ஜார்ஜ் என்னும் வேல்ஸ் இளவரசரவர்கள் அவருடைய தேவியாம் மேன்மைதங்கிய ப்ரின்ஸெஸ் விக்டோரியா மேரி என்னும் வேல்ஸ் இளவரசியாரோடும் சென்ற ஜனவரிமீ 24உ புதன்கிழமை சாயந்திரம் 4-30 மணிக்குச் சென்னைத் துறைமுகத்தில் வந்து கப்பலைவிட்டிறங்கி, சென்னை இராஜதானியிலுள்ள அரசர்கள் சிற்றரசர்களும் ஜமீன்தார்களும், கவர்னர் கௌன்ஸில்மெம்பர்கள் முதலான பெரிய உத்தியோகஸ்தர்களும், சென்னை முனிசிபல் கமிஷனர்களும் மற்றுமுள்ள நகரமாக்களும் சேர்ந்த மஹாசபையால் துறைமுகப் பக்கத்தில் இதற்காக இயற்றியிருந்த அலங்கார மண்டபத்தில் நல்வரவு கோரியுபசரிக்கப்பெற்று, பிறகு முனிசிபல் கமிஷனர்கள் அவர்களால் வந்தனோபசாரப் பத்திரமளித்து முகமன்கூறியுபசரிக்கப்பட்டு அதற்கு பதில் அளித்தபின் திருப்புகள் குதிரைப்பட்டாளங்கள் சூழ இராஜகோலத்தோடு தம் பரிவாரங்களும் மற்றுமுள்ள அரசர்கள் முதலானவர்களும் பின்தொடர, ஊர்கோலமாக கவர்ன்மெண்டவுஸுக்குச் சென்றார்கள். அன்றிரவு பாங்குவெட்டிங் ஹாலில் மேன்மைதங்கிய இளவரசர் இளவரசியார் கொலுவிருந்து உத்தியோகஸ்தர்கள் நகரமாக்கள் எல்லாருக்கும் பேட்டியளித்தார்கள். மறுநாள் சாயந்திரம் சென்னைத்தீவில் இவ்விராஜதானி ரிஸெப்ஷன் கமிட்டியார் பொதுஜனங்கள் பேரால் மேன்மைதங்கிய இளவரசர் இளவரசியார் அவர்களுக்கு

விருந்து வேடிக்கைகளால் உபசாரம் செய்து அவர்கள் நல்வரவுக்கு மகிழ்ந்து ஓர் வந்தனோப
சாரப் பத்திரமும் வாசித்தளித்தார்கள். அதற்கு பதில் சொன்னதிலும், முனிசிபல் அட்
ரெஸுக்கு பதில் சொன்னதிலும், சென்னை ஜமீன்தார்கள் நிலசுவான்கள் சங்கத்தார் வாசித்
தளித்த வந்தனோபசாரப் பத்திரத்துக்கு பதில் அளித்ததிலும், மேன்மை தங்கிய வேல்ஸ்
இளவரசர் அவர்கள் தம் உள்ளக்கருத்தை வெளியிட்டுப் பேசியதில், அவரும் இளவரசியா
ரும் ஜனங்களிடத்தில் உண்மையாகவே உள்ளன்பும் பிரீதியும் வைத்துள்ளவர்களென்பது
ஸ்பஷ்டமாக வெளியாயிற்று. அன்று காலமே மேன்மை தங்கிய வேல்ஸ் இளவரசியார்
திருவல்லிக்கேணியிலுள்ள கோஷா ஆஸ்பத்திரியைப் பார்க்க வந்தார். அவர் வருவதற்குச்
சற்றுமுந்தி குதிரைமேலிருந்த போலீஸ் அதிகாரி குழந்தைகளும் ஸ்திரீகளும் நிறைந்தி
ருந்த கூட்டத்தில் குதிரையைவிட்டுப் பின்னுக்குத்தள்ளி விலக்கவே, 11-வயதுள்ள ஒரு
பையனுக்கு குதிரை யுதைத்து முகத்தில் நன்றாகக் காயம் பட்டுவிட்டது. காயம்பட்டு
இரத்தம் ஒழுகவும் அச்சிறுவனோடிருந்த பள்ளிப்பிள்ளைகள் கதிகலங்கி அவனைச் சூழ்ந்து
நிற்கையில், பி. எல். வகுப்பில் வாசிக்கும் ஒரு வாலிபர் திடீரென்று அப்பையனைக் கையி
லெடுத்துக்கொண்டு சமயோசித சாமர்த்தியம் தப்பாமல் அச்சிறுவனை ஆஸ்பத்திரிக்குள்
கொண்டுபோய்க் குழந்தைபோல் மடியில் வைத்துக்கொண்டிருந்தார். சில நிமிஷங்களுக்
கெல்லாம் இளவரசியார் வந்துசேரவும், வெளியிலுள்ள ஜனங்கள் போட்ட கூச்சலிலிருந்து
ஏதோ ஆபத்து விளைந்ததென்பதையுணர்ந்து சூப்ரின்டெண்டெண்டை விசாரிக்கலானார்.
அவர் இளவரசியாரை, காயம்பட்ட பையனிருந்த விடத்துக்கு அழைத்துக்கொண்டு போக
வும் அச்சிறுவனைக்கண்டு தாயன்போடு உள்ளங்கனிந்துருகி உண்மையான அனுதாபம்
காட்டியதன்றி, தான் கவர்ன்மெண்டவுஸுக்குத் திரும்பினவுடனே கனம் பொருந்திய
கவர்னர் அவர்களுடைய ஸர்ஜியனையனுப்பி அச்சிறுவனுக்கு வேண்டிய சிகிச்சைகளைச்
செய்து வரும்படி ஏற்பாடு செய்து இங்கிருந்தவரையில் தினம் இருமுறை அவனுடைய
ஸ்திதியைப்பற்றி விசாரித்து வந்தார். இன்னமும் கவர்னருடைய ஸர்ஜியன் வந்து வேண்
டிய சிகிச்சை செய்துபோகிறார். இது விஷயமாக இராஜாத்தியுடைய தயவும் தாயன்பும்
ஸத்குணமும் வெளியாக திருவல்லிக்கேணியெங்கும் இவர் குணத்தைக்கண்டு புகழ்ந்து
குழந்தைகளும் பெண்டீர்களும் விசேஷமாக இராஜாத்தியிடத்தில் அன்புபாராட்டி அருமை
யாக அவரைக் கொண்டாடிவர நேரிட்டது. இதனால் அரசுக்கும் குடிக்குமுள்ள வித்தி
யாசமெல்லாம் நழுவிப்போக, குழந்தைகளும் பெண்டீர்களும் தங்களில் ஒருவரைப்போ
லவே இராஜாத்தியையும் நினைத்து குழந்தைகள் அவரைத் தாய் போலவும், பிள்ளைகளைப்
பெற்ற தாய்மார்கள் அவரைத் தங்களைப்போல் சிறந்ததோர் தாயாகவும் அன்புபாராட்டி
நேசிக்கலானார்கள். இந்த விசேஷத்தை மேன்மைதங்கிய இளவரசர் இளவரசியாரவர்களுக்
குத் தெரிவித்து குழந்தைகள் அவரிடத்து வைத்துள்ள பிரீதிக் கறிகுறியாக, விசேஷமான
பைண்டு செய்த “மாட்சிமைதங்கிய மஹாராணியார் சரித்திரப்பிரதி” யொன்றையனுப்பி
இளவரசியார் அதை யேற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்க மேன்மைதங்கிய இரா
ஜாத்தியவர்களும் அவருக்கெழுதின கடிதத்திற்கண்ட அன்பு வார்த்தைகளுக்கு வந்தனங்
கூறி அப்புஸ்தகத்தையு மேற்றுக்கொள்ள மனமுவந்து அது சங்கதியைத் தம் தோழிப்
பெண் (Lady-in-Waiting) மூலமாகத் தயவு பூரித்துத் தெரிவிக்கலானார். அவரிடத்திலி

ருந்து வந்த பதிலை யெல்லாருமறிந்து சந்தோஷிக்கும்படி. 307-வது பக்கத்தில் இங்கிலீஷிலும் தமிழிலுமாக அச்சிட்டிருக்கிறோம். மைசூருக்குப் போனபின்பும் இராஜாத்தியவர்கள் அப்பையனுடைய தமையனுக்கு மனமுருகி யொரு கடிதமெழுதியிருக்கிறார்.* மறுநாள் வெள்ளிக்கிழமை சாயந்திரம் மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசரும் இளவரசியாரும், மியூஸியம (விநோத சாலை) தோட்டத்துக்கருகில் "விக்டோரியா மெமோரியல் டெக்னிகல் இன்ஸ்டிட்யூட்" என்னும் தொழிற்சாலை ஸ்தாபனத்திற்கு அஸ்திவாரக்கல்லமைக்கும் சடங்கு நடத்தச் சென்றார்கள். சனிக்கிழமையதினம் கவர்னர் தோட்டத்தில் ஸ்திரீகளுக்காக மட்டுமென்று படுதாக்கச்சேரியும், பிறகு சாயந்திரம் தோட்டக்கச்சேரியும் வெகு வைபவமாக நடந்தது. அன்றிரவு $9\frac{1}{2}$ மணிக்குமேல் சீமையிலிருந்து இளவரசர் கப்பலாகிய "ரினௌன்" என்பதற்குக் காவலாக வந்த "ஹியாஸின்த்", "பாக்ஸ்" (Hyacinth & Fox) என்னும் இரு போர்க்கப்பல்களிலிருந்துசீமையில் செய்துவந்த வாணங்கள்விட்டு வேடிக்கை நடந்தது. புதைவாணங்களும், வெடிவாணங்களும் விந்தைவிந்தையாக விருந்தன. ஞாயிற்றுக்கிழமை கோயிலுக்குச்சென்று கடவுளைத்தொழுது, சாயங்காலம் கிண்டித்தோட்டத்திற்குப் போய்விட்டு அங்கிருந்துசுமார் $7\frac{1}{2}$மணிக்கு பீச்சுரோட்டு வழியாக கவர்ன்மெண்டு தோட்டத்துக்கு வந்து இரவு $9\frac{3}{4}$மணிக்கு ஸ்பெஷல் வண்டியிலேறிக்கொண்டு பெங்களூர் மார்க்கமாய் மைசூருக்குப் பிரயாணமாகச் சென்றார்கள்.

போகுமுன் கவர்னர் முதலாக போலீஸ் கமிஷனர், இன்ஸ்பெக்டர் ஈறாக இளவரசர்தம்வரவினிமித்தம் வேண்டிய ஏற்பாடுகள் செய்யுந் தொழிலில் ஊக்க மிகுந்துழைத்தவர்களெல்லாருக்கும் இளவரசர், அவரவர்கள் எடுத்துக்கொண்ட சிரமத்தையும் செய்தஏற்பாடுகளையும் தாம் நன்குணர்ந்ததற் கறிகுறியாக சில ஞாபக சின்னங்களளித்துபசரித்தார். கனம்பொருந்திய கவர்னர் அவர்களுக்குப் ப்ரயாணத்திலுபயோகிப்பதற்கு வசதியான மிகவும் அழகிய பெரிய வெள்ளிப் புட்டியொன்று அளித்தார். கனம ஸர். எஸ். சுப்பிரமணிய அய்யர் (ரிஸெப்ஷன் கமிட்டிச் சேர்மான்) அவர்களுக்கு இளவரசர் தாம் கையெழுத்துச் செய்த தம் படமொன்று கொடுத்தார். ரிஸெப்ஷன் கமிட்டி காரியதரிசிகளான கனம் மிஸ்டர் வி ஸி. தேசிகாசாரியாருக்கும், மிஸ்டர் எச். ஸி. கிங் அவர்களுக்கும் நைட் (ஸர்) பட்டமளித்தார். போலிஸ் கமிஷ்னர் மிஸ்டர் ஒ. ஆர். ஜோன்ஸ் அவர்களுக்கு இளவரசர் முடியில் விளங்கும் இறகுகளமைத்த வெள்ளி 'ப்ரூச்சு' ஒன்று அளித்தார். சீப் இன்ஸ்பெக்டர் பாவானந்தம்பிள்ளை யவர்களுக்கு ஒரு கௌரதாப் பதக்கம் (மெடல்) அளித்துபசரித்தார். இன்ஸ்பெக்டர் நார்த் அவர்களுக்கு ஒரு கடிகாரம் கொடுத்தார். இப்படி யெல்லாரையும் திருப்தி செய்து எல்லாராலும் திருப்தி செய்யப்பட்டவராய் மேன்மைதங்கிய இளவரசரும் இளவரசியாரும் சந்தோஷத்தால் ஹிருதயம் பூரித்தவராக ஜனங்களுக்கெல்

* மைசூரிலிருந்து மேன்மைதங்கிய இளவரசியார் ஆஸ்பத்தியிலிருக்கும் சிறுவனைப்பற்றி அவன் சீக்கிரத்தில் சொஸ்தமாக வேண்டுமென்று பிரார்த்தித்து விடுத்த கடிதமிது:—

"The "GOVERNMENT HOUSE, MYSORE, JANUARY 30th 1906.

Lady-in-Waiting is desired by H R. H. the Princess of Wales to write and thank Mr. Tyagarajan for his letter which touched her very much. The Princess was glad to hear from both the nurse and Doctor a good report of the little boy and she hopes and prays that he may make speedy and complety recovery."

லாம் தங்களுடைய நன்றியறிந்த வந்தனத்தைத் தெரிவிக்கும்படி கவர்னர் அவர்களுக்கு ஒரு கடிதமெழுதிவிட்டு, இவ்விராஜதானி ஜனங்களைப்பற்றி மிகவும் மேலான எண்ணங் கொண்டவராய், அவர்களைக்கண்டு ஜனங்கள் உண்மையாகவே யுள்ளன்பு பாராட்டியது போல் அவர்களும் ஜனங்களிடத்து அன்பு பூரித்தவர்களாகச் சென்னையைவிட்டு மைசூருக்குப் பிரயாணமாகச் சென்றார்கள். போகுமுன் இச்சென்னையின் முக்கிய ஸ்தானம் "ப்ளாக் டௌன்" என்று ஐரோப்பியர் அவமதிப்புக் குரியதோர் விகாரமான பழையபேரால் வழங்கப்பட்டுவந்ததை மாற்றி வேறு தகுந்த பேரளிக்க வேண்டுமென்று ஜனங்கள் சில காலமாகப் பிரஸ்தாபித்துக் கொண்டிருந்ததற் கிணங்க அப்பெயரை மாற்றி அதற்கு அவருடைய சொந்தப் பெயரைக்கொடுத்து "ஜார்ஜ்டௌன்" என்றழைத்தால், கெட்டபேரை மாற்றினதோடு அபூர்வமான அவருடைய நல் விஜயமும் ஜனங்கள் ஞாபகத்திலிருக்கச் சாதகமாகுமென்று சொல்லியதோர் ப்ரேரேபணையை மனதிலேற்றுச் சிந்தித்து, ஆதியில் இச்சென்னையில் குடியேறின வெள்ளைக்காரர்கள், சொட்டைச் சொல்லாயிட்டதோர் பட்டப்பேரை, அவர்களுடையஜாதிக்கும் சந்ததிக்கும் பிரதிநிதியாய் நிற்கும் பிரதம ஸ்தானத்தை வகித்த மேன்மை தங்கியவேல்ஸ் இளவரசர் அவர்கள், தம் முன்னோர் செய்த பிழையைத் திருத்தவேண்டியது தம் கடமையென்றுன்னி, ஜனங்களுக்கும் தமக்குமுண்டான அத்யந்தப் பிரீதியை நினைத்துத் தமது பேரையே கொடுக்க மனமுவந்து "இனி, 'ப்ளாக் டௌன்' என்கிற பேர் நீங்கிப்போகவும், அதற்கு பதிலாக "ஜார்ஜ்டௌன்" என்கிற பேர் இளவரசர் இளவரசியார் இந்நகருக்கு விஜயம் செய்ததற்கு ஒருவித ஞாபகமும் அடையாளமுமாக விருக்க அப்பேர் வழங்கிவரவேண்டுமென்றும் மனமுவந்து தம்மெண்ணத்தை வெளியிட்டுச் சொல்ல," கவர்ன்மெண்டாரும் 1906 ௵ ஜனவரி௴ 26௳ யிட்ட 49-ம் நெ. பப்ளிக் டிபார்மெண்டு நோடிபிகேஷனில் மேன்மைதங்கிய இளவரசர் அவர்கள் திருவுளம் சாற்றியதைத் தலைமேல் வகித்து அப்படியே அந்தப்பேர் எல்லா ஸர்க்கார் விவகாரங்களிலும் ஊர்ஜிதத்துக்கு வரவேண்டுமென்று உத்தரவுசெய்து, இராஜ தம்பதிகள் பட்டணப் பிரவேசம் செய்து இப்புதுப்பெயரைக் கோலாகலவைபவங்களோடு நாமகரண சடங்கு செய்தளிக்க அவகாசமில்லாததைப் பற்றி விசனிப்பதைத் தெரிவித்ததையும் வெளிப்படுத்தி போர்ட் ஸெண்ட் ஜார்ஜ் கெஜட்டின் 27௳ வெளியான பிரத்தியேகப் பதிப்பில் விளம்பரம் செய்து விட்டார்கள். அவ்விளம்பரம் பின்வருமாறு:—

## "GEORGE TOWN."

"Fort St. George Gazette Extraordinary" dated, Saturday, 27th January, 1906.

Public Department Notfication No 49. dated. 26th January 1906.—"It is hereby notified for general information, that portion of the City of Madras which has hitherto been known as "Black Town" will in future be called "Georgetown." This change of name is made at the express desire of His Royal Highness the Prince of Wales to whom the popular sentiment in the matter has been represented, and His Royal Highness has graciously permitted the use of his name to commemorate the Royal Visit to Madras. Their Royal Hignesses the Prince and Princess of Wales regret that, owing to the shortness of their stay in Madras, they are unable to visit the part of the City in question in order to formally bestow the new name. The necessary direction as regards the change of terms 'in all official documents will be issued hereafter." (By Order of H. E. the Governor in Council) *M. Hammick*

*Ag chief Secretary to Govt.*

## "BLACK TOWN" AND "GEORGE TOWN."

MR. C. V. SWAMINATHAIYER INFORMS US that he submitted a copy of his letter, proposing that Black Town should in future be called George Town, (which appeared in our issue of the 22nd instant) to H. E. the Governor, who has replied as follows through his Private Secretary:—"I am desired by His Excellency to inform you that he thinks the suggestion made in your letter a very good one. But before anything further is done, His Royal Highness's pleasure must be ascertained." We have no doubt that His Royal Highness will be agreeable to the re-christening of Black Town with a name so appropriate to the present occasion.—*The Madras Mail of 25th January, 1906.*

## ஜார்ஜ்டௌன்.

"CERTAINLY, THERE COULD BE NO HAPPIER CHOICE."—*Madras Mail of 27th January.*

இதுவிஷயமாக நேர்ந்த சம்பவங்களைச் சுருக்கமாக இங்கெடுத்துரைப்பது ஒக்கும். சென்ற நவம்பர் மாசத்தில் சில நிருப நேயர்கள் மெயில்பத்திரிகைக்கெழுதி 'ப்ளாக் டௌன்' என்கிற பேர் விகாரமாகவும், அவமதிப்புக்குரியதாகவு மிருக்கிறதென்று சொல்லி, அப்பேர் வந்த விவரத்தைக் குறிப்பிட்டு அதற்குபதிலாக வேறு பேர் ஒன்று வேல்ஸ் இளவரசர் விஜயம் செய்யப் போவதை முன்னிட்டுக் கொடுத்தால் நலமாகவிருக்குமென்று தெரிவித்துக்கொண்டெழுதினார்கள். நிருபநேசர்கள் பலரும் பல யோஜனைகள் சொன்னதன்றி, மெயில் பத்திரிகையின் ஆசிரியரும் "ப்ளாக்டௌன்" என்கிறபேர் எவ்விதத்திலும் விகாரமானதேயாதலால் அதை மாற்றிவிட்டு வேறுபேர் கொடுப்பது நலமெனபதை யொப்புக்கொண்டு அவருக்குத் தோன்றின இரண்டொரு பேர்களைச்சொல்லி அவர் அபிப்பிராயத்தை வெளியிட்டெழுதினார். பிறகு அதைப்பற்றி ஒரு பிரஸ்தாபமும் வெளிவரக் காணோம். ஆனால் கனம் பொருந்திய கவர்னர் அவர்களோ, கவர்ன்மெண்டாரே தானோ, இதைப் பற்றி ஜனங்களுடைய அபிப்பிராயம் எப்படியிருக்கிறதோ தெரிந்து கொள்ளவேண்டுமென்றுத் தேசித்து போலீஸ் கமிஷனர் மூலமாய் விசாரிக்கத் தலைப்பட்டார்கள் போலும். இந்த விசாரணையை முனிசிபல் கமிஷனர்கள் மூலமாகச் செய்யாமல் போலீஸ் கமிஷனர் மூலமாகச் செய்தது ஒரு பெருங்குற்றமாகச் சொல்லப்படுகிறது. இது நமக்கு ஒரு பெரிய குற்றமாகத்தோன்றவில்லை. ஏனெனில் இந்த ஊருக்கு இந்தப்பேர் பொருந்தவில்லையென்றால்வேறு பொருத்தமானபேர் என்னகொடுக்கலாமென்று கேட்க, ஜனங்கள் அபிப்பிராயம் தெரியவேண்டியது ஒன்று முக்கியம்; அஃதோடு அந்த அபிப்பிராயத்தை சீக்கிரம்தெரிந்து கொள்ளச் சாதகம் வாய்ந்த வழியெதுவோ அதையனுசரித்தறிவது யாவர்க்கும் இயல்பாம். இதனால் கவர்ன்மெண்டார் ஜனங்களை அசட்டைபண்ணினதாகவாவது அவமானம் செய்ததாகவாவது நினைப்பது சரியல்லவென்று நம் புத்திக்குத்தோன்றுகிறது. இப்படியே தான் இன்னம் எத்தனையோ கனவான்களுக்கும் தோன்றிற்றென்பது ஸ்பஷ்டம். ஏனென்றால் ஜனவரிமீ 18உ யிட்டு அச்சிட்டஸர்க்குலர் ஒன்று ஆயிரக்கணக்காக எல்லாருக்கும் பட்டணமெங்கிலும், ஹைகோர்ட்டிலும், பச்சையப்பன் மாளிகைக் கருகிலுள்ள வி. டிவிஷன் போலீஸ் ஸ்டேஷனிலும் ஏராளமாக வழங்கப்பட்டது. எத்தனையோ கனதனவான்களும் நகரமாக்களும் ஜனத்தலைவர்களும் இதற்கு பதிலெழுதி யவரவர்கள் அபிப்பிராயத்தையும் வெளியிட்டிருந்தார்கள். அப்பிடியே நமக்கும் போலீஸ் டிப்டிகமிஷனர் மிஸ்டர் வி. எல். பீடி கையொப்பமிட்டச்சிட்டஸர்க்குலர் ஒன்று கிடைத்தது. நாமும் நமக்குப்பட்டதோரபிப்பி

ராயத்தை வெளியிட்டோம். இப்பெயர் நமக்குத் தோன்றிய வழியென்னவென்றால் அதை விரித்துரைக்கச் சாத்திய மில்லை. "அது வந்தவழியே தான் வந்தது!" ஆனால் சுயநய மெதுவும் பாராட்டிச் சொன்னதில்லையென்றுறுதியாய்ச் சொல்லவல்லோம். உண்மை வழிநின்று உள்ளதைச் சொன்னதன்றி வேறில்லை. ஒருவரிடத்தும் வர்மம் சாதித்து வேற்றுமை பாராட்டா உள்ளத்தார்க்குப் புகழ்ச்சியு மிகழ்ச்சியுமொன்றே யென்று பெரியோர் சொல்லுவர். "எக்காலமுந்தனக்கென்ன வொருசெயலிலாவேழைநீ"யென்று "என தாவியுடல் பொருள் மௌனியாய் வந்து கையேற்று நமதென்ற" நாதன் முன் எல்லாப்பேர்களும் அவன் பேராக, இரவல்பேர்வைத்துச் சீவனம் செய்யும் சிதாபாஸர்களாகிய நாம் ஏன் இப்படி சண்டை போட்டுச் சச்சரவு செய்துகொள்ள வேண்டுமென்று யோஜித்தால் நாமரூப பேதமற்ற நாலாம் நிலையிலுள்ள பரைவாக்கு நாமரூபபேதப் பிரபஞ்சத்தில் நுழைந்து வைகரணியானல் "வைகரியின் வாக்கு விகாரமே யெப்போதும்" என்பதினுண்மை உள்ள படி தானக விளங்குகிறது. இங்கே இந்தப் பாட்டு ஞாபகத்துக்கு வருகிறது:—

"பூதமொடு பழகி வளரிந்திரியமாம் பேய்கள்
புந்தி முதலான பேய்கள்
போராடு கோபாதி ராக்ஷஸப் பேய்களென்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர் வேதவஞ்சன்
விதித்தானிவ் வல்லலெல்லாம்
வீழும்படிக்குனது—

* * *

இனி, மேலெழுதக் கையோடவில்லை; வாய்திறந்துபேச வார்த்தையு மெழவில்லை; ஆதலால்—

ஓம்தத்ஸத்.

---

## "Namadharana" Or ""Fixing the Mind on the Essence of All Names."

*The Story of a Psybhic Law applied to Life.*

## "நாமதாரணை"—யோகநெறிபற்றியதோர்கதை.

அது ஒரு சுக்கிரவாரம். தேவிக்குரிய நாளாதலால் நாமமறிந்த யோகியொருவர் தேவியைக்குறித்துச் சிந்தித்து "நாமதாரணை" செய்து நாதானுசந்தானம் பழகி வந்தார். அந்நாமதாரணையின் விசேஷத்தைவிளக்கி விரித்துச்சொல்ல இங்கு சாத்தியமில்லை. இச் சஞ்சிகையின் முதல் விஷயமான "மஹிஷாசுரமர்த்தனம்" என்பதின் முடிவிலுள்ள அப் பியாசயோகியின் அனுபவத்தில் அது நன்றாகச் சுருக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி யிங்கெழுதவாவது விவரிக்கவாவது எண்ணமில்லை. அதற்குச் சமயமும் இதுவல்ல. ஆனால் திருமந்திரோபதேசத்திற் சொல்லியபடி,—

"ஓம வென்றோதி யெம்முள்ளொளியாய் நிற்கும்
"நாம நறுங்குழற் றையலைக்" காணவும்

நாதானுசந்தான முறையறிந்தப்பியசிப்பவர்களுக்கு, கருவி கரணங்களுக் கெட்டாதுள்ள "மௌனவெளி"யில் அறிவே யுணர்வாயிருந் துணரப்படும் "சப்ததன்மாத்திரையான" நாதமொன்று கேட்குமென்று சொல்வார்கள்.

அதைப்பற்றியும் இங்கே சொல்லச் சமயமில்லை; சொல்லவேண்டுமென்கிற எண்ணமுமில்லை. ஆனால் நம் பெரியோர்கள் "நாதமுடிவில் நல்யோகமிருப்பது" என்றுஞ்சொல்லியிருப்பதால், ஆத்மயோகிகள் "நாதானுசந்தானம்" செய்து பழகி அதில் அப்பியாசமுதிர்ந்து நிலைத்தபின் அதையுங் கடந்து "நாதாந்த ரூபமாயுள்ள" "வேதாந்தமோன" வெளியில் பிரவேசித்து அங்கே யாத்மதரிசனங்கண்டு "தானே தானாய்த் தன்மயமாய்த் தன்மை முன்னிலையற்று நிற்பார்கள்" என்பது உண்மை. இது பழங்கதையல்ல; அன்றைக்குகூட இன்றைக்கும் என்றைக்கு முண்மை இப்படியவர்கள் தங்கள் வழியைப் பார்த்துக்கொண்டு மேல்நோக்கிப் போகையில் பூர்வசங்கல்பங்கள் ஏதாவதிருந்தால் அவை கடன்காரன் போல் வந்து நின்று தங்கள் கடனைத் தண்டப்பார்க்கும். திருவருள் விசேஷத்தால் இப்படி நேரும் பிரதிபந்தங்களைச் சிறிது காலத்துக்கு ஸத்குருவின் அனுக்ரக விசேஷ பலத்தால் தள்ளிவைக்கலாம். இக்காலம் யோகிகளுக்கு மிகவும் அருமையான காலம். ஏனென்றால் இந்தக்காலத்தில்தான் அவர்கள் தங்களுடைய பூர்வ வாசனைகளையும கர்மங்களையும் வெல்லத்தக்க "அருள்வலி" பெறவேண்டும். ஆத்மவித்தை யென்பது த்ரிகுணாத்மிகனும் ஜீவனைப் பிரித்து த்ரிகுணாதீதனும் ஆத்மனாகக் கட்டும் ஒரு கட்டட வித்தைக்கு ஒப்பிடக் கூடியதாகவிருக்கிறது. "Character-Building" என்னும் இந்த "மதிவளர் வித்தை"யிற் பழகுவோர் மிகவும் உஷாராக விருக்கவேண்டியது. அதுவும் இந்த தேகத்தை வைத்துக்கொண்டு இந்த ஜன்மத்திலே ஆத்மதரிசனங்கண்டு சுத்தாத்மனாக விரும்புகிற முமுக்ஷுக்கள் பழவீட்டின் மச்சையிடிக்காமல் அஸ்திவாரத்தை நோண்டிப்பார்த்து முன்னிலும் பன்மடங்கு அதிகமாக ஆழம் செல்ல அஸ்திவாரம் இடுகிற "இஞ்சினீர்" அல்லது "வஸ்து சாஸ்திர விற்பன்னர்" எவ்வளவு உஷாராக விருப்பார்களோ அதிலும் பன்மடங்கு அதிக உஷாராக விருந்துழைப்பார்கள். ஏனென்றால் இத்தேகத்தின் கூறுபாடு அவ்வள்வு ஆச்சரியகரமாய்ப் பிரித்துக் கட்டத்தக்க தன்மையமைந்து விசித்திரமாய் விளங்கினாலும், அதன் உடற்கூறு தத்துவங்கள் அனைத்தையும் (96) உள்ளபடியறிந்த தத்துவதரிசிகளுக்கன்றி மற்றவர்களுக்கு எளிதில் வசப்பட்டு வருவதாயில்லை. ஆகலால்தான் யோகாப்பியாசமும், ஞானப்பியாசமும், குருமுகமாக விசாரித்து குரு சந்நிதானத்திலிருந்து செய்ய வேண்டுமென்பது. இப்படி உள்ளபடி யுண்மைக்குழைத்து வருகிறவர்கள், தாங்கள் போகும்வழியில் மேற்படியிலுறையுங் காலங்களில் அவர்களுடைய புத்தி நுட்பமும், மனோசக்திகளும், இயல்பாயுள்ளதற்குமேல் எத்தனையோ மடங்கு அதிகமாக விளங்கும். அப்பொழுது அவர்கள் வாக்கும் செயலும் தற்போதமிழந்து தானற்றவிடத்திலிருந்து வருவதால், வியஷ்டி ரூபமான (தனித்தனி) ஜனங்களின் (கூட்ட) சமஷ்டி ரூப தத்துவமான ஈசுவரவாக்குப்போலும், ஈசுவரசங்கற்பம் போலும், கரைகாணா வெள்ளம் கட்டுக்கடங்காது தனக்கெதிர்ப்பட்ட தடைகளை யெல்லாம்தாண்டிக்கொண்டுமடித்துக்கொண்டும் போவதுபோலும், தடையின்றி முடிவெய்துமென்பர். இதை ஹிந்துக்கள் அனுக்ரக சக்தியென்றும், அருட்பிரவாகமென்றும் சொல்லுவார்கள். மேற்றிசையில் முன்னோர்கள் இந்த வுண்மையை "Vox Populi Vox Dei"= "பொது ஜனவாக்கு" என்று இக்காலத்தார் சொல்லும் "ஜனசமஷ்டி வாக்கு" "தெய்வ வாக்கு"க்குச் சரியென்று சொல்லியுள்ளார். எல்லா ஜனங்களுக்கும் பொதுவாய், எல்லா ஜனங்கள் உள்ளத்திலும் உண்மையாய் வசிக்கும் வாக்கு "பரைவாக்கு" என்பார்கள். இது

வே ஜனங்களின் சமஷ்டிரூபகாரணமான வாக்தேவி. வாகீசுவரி யென்றும், ஸரஸ்வதியென்றும், பரையென்றும், வாலையென்றும், வாலாம்பிகையென்றும் சொல்லி இந்த ஆத்மதத்துவமாம் காரணப்பொருளை வழிபட்டுய்ய, 'வேதாந்தசித்தாந்தசமரஸநன்னிலைபெற்ற' பெரியோர் "சமயநெறி"யாம் "உபாஸனைமுறை" போதிப்பர். கிறிஸ்துவின் ப்ரிய சிஷ்யரும் மஹாயோகியுமான ஸேண்ட் ஜான் அவரெழுதிய புஸ்தகத்தில் இதை "Logos" என்றுசொல்லி விளக்கியிருக்கிறார். இதை ஆங்கிலர் "The Word" என்று மொழி பெயர்த்திருக்கிறார்கள். "In the beginning was the Word, and the Word was with God, and the Word was God" என்று "திரிபுரைசக்கர" உண்மையாம் பரதத்துவத்தை அவர் சொல்லியிருப்பது உண்மையாகவும் எல்லா நல்யோகிகளுடைய உள்ளனுபவத்துக்கு மொத்ததாயுமிருக்கிறது. நாதஸ்வரூபமான இந்த ஆதிதத்துவத்தை யுணர்ந்ததனோடு ஒன்றுபட முயலுவதே உண்மையான "நாதானுசந்தான"மாம்; ஒன்றுபட்டிரண்டறக் கலந்தது "நாதாந்தயோக"மாம். "நாதமுடிவிலே நல்யோகமிருப்பது" என்ற திருமந்திரோபதேசத்தினர்த்தம் இதுவே. "நாதானுசந்தானம்" சித்தித்து "நாதாந்தயோகத்தில்" முயலுபவர்கள் அடிக்கடி நாதாந்தயோகம் நழுவி நாதானுசந்தானத்தில்விழுவார்கள். அப்பொழுது பரைவாக்கின் ப்ரவிருத்தியான (அவ்யக்தகாரணத்தின் வியக்தப்ரவிருத்திகாரியமான) பைசந்திவாக்கு என்னும் அதிசூக்ஷ்ம வாக்குத் தோன்றும்.

1. பரைவாக்கென்பது "உள்ளே யர்த்தமாத்திரம் விளக்குவதாய், மற்ற வாக்குகளைப் போல்தோற்றமு மொடுக்கமுமின்றி நிலைபெற்றதாய், அதிகாரத்தை யுண்டாக்கி யதனையழிக்கு மாற்றலுடையதாய் விந்துதத்துவத்தையுங் கடந்த நாததத்துவத்தின் காரியமாயுள்ளதாம். இவ்வாக்கைக் கண்டோர் பேரறிவு, பரமானந்தம், சுதந்திரம், நித்திய தத்துவம், இவைகளைப் பெறுவர்" என்று மேலோர் யோகதத்துவ சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறார்கள். ('சிவஞானசித்தியார்' பார்த்துத் தெளிவோர் தெளிக.)

2. இந்தப் பரைவாக்கின் காரியமான பைசந்தி வாக்கு "விந்துரூபமாய், தன்னிடத்திற் காரியங்களெல்லாம் விளங்காததும் புத்தியாலிதென்று சுட்டியறியப்படாததுமான அக்ஷரங்களை, ஒன்றொடொன்றெவ்வாத வடிவாகவுடையதாய், பரைவாக்கே தனக்குக் காரணமாய், தன்னிடத்துத் தோற்றப்பட்ட அக்ஷரங்களின் முறைமையைச் சற்றுந் தெரியாதபடி தன்னிடத்தொடுக்கி, மயிலின் முட்டையிலுள்ளிருக்குங் கருசலரூபமாயிருக்கும்போதும் மயிலினுருவந் தோற்றுவதுபோல், எழுத்துக்கள் சொரூபீகரித்துத் தோன்றி விளங்குவதாம்" என்று மேலோர் வரைந்திருக்கிறார்கள். ('சிவஞானசித்தியார்' பார்க்கவும்.)

நாதானுசந்தானத்தில் நழுவி விழுந்த "நல்யோகி" பின்வாங்காத் தன்முயற்சியால் மேலேறிவிட்டால், "மயிலின் முட்டையிலுள்ளிருக்கும் சலரூபமான கருவில் மயிலுருவந் தோன்றுவதுபோல்" புத்திக்கெட்டாததாய் அறிவே யுணர்வாயிருந்துணரும் உணர்ச்சியோடிருந்து, மேற்படியில் அதையும் விட்டு ஆத்மதரிசனானந்தத்தில் மூழ்கி நிற்பான். அதிலிருந்து கீழ்ப்படியிலிறங்கிப் பிரவிருத்தி மார்க்கத்திலே பின்னும் சென்றாலோ, பைசந்திவாக்கின் பிரவிருத்தி காரியமான மத்திமைவாக்கு ரூபத்தையுணர்வான்.

"உள்ளுணர் வோசையாகிச் செவியினுறுதல் செய்யா
தொளளிய பிராணவாயு விருத்தியை யுடையதன்றித்

தெள்ளியவக்கரங்கள் சிந்திடுஞ் செயலதின்றி
மெள்ளவே யெழுவதாகும் மத்திமை வேறதாயே."—சிவஞானசித்தியார்.

3. இந்த மத்திமைவாக்கு, "கண்டத்தின்கண்நின்று அறிவாய். உள்ளே யோர் தொனியுமாய், காதிந்திரியத்துக்கு விஷயமாகாமல் சவிகற்பசொரூபமாய், பிராணவாயுவினைச் சார்ந்து புறம்பே பேசுவிக்குந் தன்மையினைப் பொருந்தாமல், பைசந்தி யினின்றும் விளங்கப்படாத அக்ஷரங்களை மிடறுமுதலிய தானங்களினின்று, நானாவிதமாகப் புறம்பே வெளிப்பட்டுத் தொனிக்குந் தொழில்களுமற்று; புத்தியையே உபாதான காரணமாகக் கொண்டு மெத்தென்று தோன்றுவதாய், ஸ்தூலவொலிக்குக் காரணமாய் வேறுபட்டெழுந்திருப்பதாம்." என்று மேலோர் சொல்லியிருக்கிறார்கள்.

இதையே "அசரீரிவாக்"கென்றும், "அருள்வாக்குப்பிறத்த"லென்றும் சொல்வார்கள். இந்த வாக்கை யுள்ளபடி கிரமக்கிரமமாக பரை, பைசந்தி, மத்திமை யென்னும் பிரவிருத்தி வழிபற்றி யாரொருவர் யோகஸம்பம சாமர்த்தியத்தால் உணர்ந்து, உணர்ந்ததை யுள்ளபடி யுள்ளத்திருத்திச் சிந்திக்கத் தக்கவர்களோ அவர்கள் "சித்தன்போக்கு சிவன்போக்கு" என்கிற வசனத்துக்கிணங்க கடவுள்வழிபட்டே நடப்பார்கள். அவர்கள் இந்நிலை கலையாது தற்போதமின்றியே வியவகாரத்தில் பிரவேசிக்குங்கால், அவர்கள் உலகவழிபற்றி யுள்ள சாதகபாதகங்களை யுன்னாமல், நயபயம் விட்டு, அருள்வழிப்பட்டு, அத்தனையே பின்பற்றிச் செல்வார்கள். அவர்கள் உலகவழிக்குக் கட்டுப்பட்டு நடக்காததை இராஜாதிராஜர்களெல்லாம் கண்டுகொண்டே "சித்தன்போக்கு சிவன்போக்கு" என்று விட்டுவிட்டார்கள்.* இப்படிப்பட்டவர்களில் யேசுகிறிஸ்துவும் ஒருவரே. அவர் எதுவும் தற்போதத்தால் தன்னயம் பாராட்டி, தன்னுடைய சங்கற்பமாகச் செய்தாரில்லை. எல்லாம் ஈசுவர சங்கற்பமென்றே உள்ளபடி யோர்ந்துணர்ந்து உணர்ந்தபடி யொழுகினரன்றி, உயிருக்கு ஆபத்துவந்தகாலத்தும் வேறுவழி பற்றினரில்லை. "My Father works and I work" என்று அவர் அடிக்கடிச் சொல்லியிருக்கிறார். அதாவது 'ஈசுவர சங்கற்பம் எப்படியோ அப்படியே தான் நடப்பதன்றித் தனக்கென்றொருவழி பற்றி யொழுகுவதில்லையென்று சொல்லி வந்தார். இதையேதான் "சித்தன் போக்கு சிவன் போக்கு" என்று நம்மவர்கள் வழங்குகிறார்கள். இந்த மத்திமை யிலிருந்துண்டாவது செவிக்குக் கேட்பதாயுள்ள வைகரிவாக்கு.

4. இந்த வைகரிவாக்கு "செவிக்குக் கேட்கப்படுவதாய், அவ்வவ்வர்த்தங்களைப் பொருந்திய சத்தரூபமாய், உதானவாயுவைச் சார்ந்து பல், இதழ், நா, நாசி, அண்ணம் என்னும் இவற்றின் முயற்சியையும் ஸ்தானத்தையும் பொருந்தி ஐம்பத்தோரக்ஷரமாவதாய், அகாரமுதலிய வொழுங்கில் தூலவெழுத் தெட்டுவர்க்கத்தைப் பொருந்தி நிற்பதாய், ஒருவன் ஒன்றையறியுமிடத்து அவனுடைய அறிவைத் துணைக் காரணமாக வுள்ளதாய், பிராணவாயு மூலாதாரத்தினின்று ப்ரஹ்மரந்திர மளவாக முட்டிக் காரியப்படுவதாம்" என்று மேலோர் விளக்கியிருக்கிறார்கள்.

இந்நான்கு வாக்குகளையும் பரை அல்லது சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி யென்று வகுத்துச் சொல்வார்கள். இவைகளை யோகானுபவத்திலுணர்ந்த ஒரு அப்பியாஸயோகி இவற்றின் குணங்களை வெகு சுருக்கமாக நாலுவரிகளில் சொல்லியிருக்கிறார். சித்தர்கள் பரிபாஷையில் அவர் சொல்லியுள்ள இவ்வாக்குகள் நான்கின் இலக்ஷணமிது:—

(1) (பரை):"சூக்குமை வாக்கது சூன்ய சம்பாஷணை."
(2) "பைசந்தி வாக்கதுவோ அந்தி சந்தி மஞ்சள் வெயில்."
(3) "மத்திமை வாக்கதுவும் மனக்குரங்குகட்குடித்து மழலை பேசல்."
(4) "வைகரியின் வாக்கு 'விகாரமே' யெப்போதும்."

*Comp.— 'Wh n Yes has once been pronounced in that region then the No of millions is nothing at all; then fire, the stake, death, ridicule, and bitter exterminations, are of no avail whatever;"—*Ed. Carpenter.*

இந்த நான்கு வாக்குகளையும் எவனொருவன் நெறிதவறாது அப்பியசித்து அதனதன் சொரூபமறிந்து அந்தந்த நிலையில் நின்றுணர வல்லவனோ அவனே "வாகீசுவரியை நேரில் தரிசனம் செய்து, வாகீசுவரியே யாவன்!"†என்று ஸ்ரீ சங்கராசாரியார் சொல்லியிருக்கிறார்.

* * *

யோகநிலை யுண்மை யிப்படியாதலால் யோகாப்பியாசிகள் ஏதாவது சொல்லிப் பலித்துவிட்டால், அது அவர்கள் உலகத்தாரைப்போல் தன்னயம் பாராட்டித்தற்போதத்தா லுரைத்ததாகக் கருதி, அவர்கள் எண்ணாத எண்ணமெல்லாம் அவர்கள் உள்ளத்திலிருந்ததாகச்சொல்லி வாது விளைத்து அவர்களை வம்புக்கிழுப்பது சரியல்லவென்பதை வற்புறுத்த ஒரு பெரியவர் நமக்கு ஒரு சமயத்தில் இத்தனை விருத்தாந்தங்களையும் பச்சைமரத்தாணிபோல் மனதிற்பதியச் சொன்னார். அதை நாம்கிரகித்தனுஷ்டித்தமட்டில் இங்கே திருப்பி எழுதினோம். சாந்தோக்கியத்தில் ஸநத்குமாரர் இதை நாரதருக்குபதேசிக்கிறார்.

†Comp.—"O freed soul! that has completed its relation to the body! O soaring, happy beyond words, into other regions passing, salutations to you, freed, redeemed soul!"—*Ed. Carpenter*, "Towards Democracy."

## *"A STORY OF THE ROYAL VISIT".

## இராஜதம்பதிகள் விஜயத்தைப் பற்றியதோர் கதை.

இராஜதம்பதிகளான மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசரும் இளவரசியாரும் சென்னைக்கு விஜயமாய் வந்திருந்தபொழுது பின்வரும் அதிர்சயமான சம்பவம் நேர்ந்ததாக, இதனுண்மையறிந்த ஒருவர் சென்னை மெயில் பத்திரிகைக்கெழுதியிருக்கிறார். இக்கதை ஜனவரிமீ 27உ சனிக்கிழமை இராஜதம்பதிகள் சென்னையிலிருக்கும்பொழுது வெளியான பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டதால் வெறும் கட்டுக்கதையாகவின்றி உள்ளபடி நேர்ந்ததோர் சம்பவத்தையே ஸ்ரீங்காரரஸம் பொழிய வர்ணித்து எழுதியிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. மாக்ஷிமைதங்கிய எட்வர்ட் சக்ரவர்த்தியவர்கள் பட்டத்துக்குவந்து முடிதரித்த வைபவத்தைக்கொண்டாடக் கூட்டிய டில்லிதர்பாருக்கு, 1857ஹூ நடந்த கலகத்தையடக்கக் காரணமாயிருந்த இராணுவ வீரர்களெல்லாரும் (Mutiny Veterans) இராஜோபசாரமாயழைத்துக் கொண்டாடப்பட்டார்கள். அப்பொழுது இராணுவத்திலிருந்து சௌரதாபதக்கம்பெற்ற வீரர்களில் மிகுதியாயிருந்த சிலர் வயதுசென்ற கிழவர்களாயிருந்ததால், அவர்களையெல்லாம் வெகு மரியாதையாகவும் ராஜோபசாரத்தோடும் நடத்தி அவர்களுக்கு வேண்டிய சாதகங்களெல்லாம் வெகு ஜாக்ரதையாகச் செய்யப்பட்டுவந்தன. ஆனாலும் தொண்டு கிழமானவர்கள் குளிர்தாங்காது வருந்தி விழுந்துபோகாது காக்கமனுஷயத்தனத்தால் செய்யக்கூடியதொன்றும் செய்யாமல் விடவில்லை யானாலும் சிலர் குளிர் தாங்காது விழுந்துபோனார்கள். அப்படி விழுந்தபோனவர்களில் இச்சென்னையிலிருந்து சென்ற ஆமட்ஆலி என்னும் விருத்தாப்பிய வீரன் ஒருவன். இந்த மஹாவீரன் டில்லிதர்பாருக்குத் தன்னை அழைத்த இராஜகட்டளையைச் சிரமேல்வகித்து டில்லிக்குப்போனவிடத்தில் குளிர்தாங்காது விழுந்து மடிந்து மாண்டுபோக, இவனுடைய சௌரதாப்பதக்கமும் (Mutiny Medal) மற்ற சொத்துக்களும் சர்க்காரால் இவனுடைய ஏகபுத்திரிக்கு அனுப்பப்பட்டது. அந்தமாது விவாகமாகி குழந்தைகளைப்பெற்று விதந்துவாய் வேறு ஜீவனோபாயமின்றிப் போனதால், வயதுசென்ற தன் தகப்பனாரைக் காத்துக்கொண்டு அவரோடுகூடவிருக்கலாமென்று பிறந்தவீடு திரும்பிவந்து அவரிருந்த குக்கிராமத்தில் தானும் வசித்து வந்தாள். வயதுசென்ற தன் தகப்பனார் டில்லிதர்பாருக்குப் பிரயாணமாகப் புறப்பட்டுப்போனபொழுது அவரிடத்தன்புநிறைந்தஇப்பெண்மணி தான் கண்ணால் பார்க்க அவர் உயிரோடு திரும்பிவருவதருமை யென்றுன்னிக் கண்ணீரும் கம்பலையுமாக அவரை வழிவிட்டனுப்பி அதே விசாரமாயிருந்தாள். அவள் கொண்ட அச்சமும் அப்படியே நிஜமாகிவிட ஏழை ஸ்திரீ ஜீவனுத்துக்கு வேறுவழியின்றி, தன் தகப்பனாருக்குவந்த பென்ஷனும் நின்றுபோக, அவர் குடியிருந்த குடிசையும் ஒரு ஏகரா நிலமும் மட்டுமிருந்ததைக் கொண்டு சௌரவமாகவே கஷ்டங்களையெல்லாம் சகித்துக் கொண்டு ஜீவனம்செய்துவந்தாள். அவள் தகப்பனாரையறிந்த கலெக்டர்துரை அவளுடைய ஏழமையையறிந்து அவள் தகப்பனாருக்கு இராணுவ சேவகத்தில் கிடைத்த சௌரதாப்பதக்கத்தைக் கொடுத்தால் அதற்குப்பெருந்தொகை கொடுப்பதாகச் சொல்லிப் பலதடவை வற்புறுத்திக் கேட்டும் அதை யாருக்கும் கொடுக்கக்கூடாதென்று வெகு பத்திரமாக வைத்திருந்தாள். அவள் தகப்பனார்

* The *Madras Mail* is responsible for this story which it publishes above the singnature of '*Madras*' which, if we are not mistaken, is the officially adopted form signature of the Bishop of Madras.

உபயோகித்த அபூர்வமான ஊன்றுகோல் ஒன்றை மட்டும் அந்த துரைக்கு அவருடைய ஞாபகசின்னமாக வைத்துக்கொள்ளும்படி கொடுத்தாளாயினும் அதற்காக ஒரு பைசாவும் பதில் பெற்றுக்கொள்ள இணங்காது மறுத்துவிட்டாள். மிக்கவேழையானாலும் அவள் தன் கௌரவத்தைக் காப்பாற்றிவந்த பெருமையைக் கண்டு அந்த துரையும் மனமகிழ்ந்து, நேரில் உதவிசெய்தால் அவளேற்றுக்கொள்ளாளென்று பலவிதத்திலும் அவளுக்கு சிற்சில உபகாரங்கள் செய்யப்பார்த்து ஆதரித்து வந்தார்.

இப்படிச் சில வருஷங்கள் கழிந்தன. ஒருநாள் அந்தக்குப்பத்தின் கேணிக்கரைக்குத் தண்ணீர் மொள்ளப்போனாள். அங்கே சென்னையிலிருந்து விவாகமாய் வந்த ஷீக்ஹாஸான் மகள் தானும் தண்ணீர் மொண்டுபோக வந்திருந்தாள். அப்பொழுது ஆமட்ஆலி யென்னும் வீரன்மகள் தன் தகப்பனாருக்குச் சக்ரவர்த்தியிடமிருந்து வந்த அழைப்புப் பத்திரத்தை மடியில் வைத்துக்கொண்டிருந்தாள். அது தவறி விழுந்தது. அதைக்காணவும் கேணிக்கரைக்குத் தண்ணீர் மொள்ளவந்த பெண்டீர்களெல்லாரும் ராஜாவைப்பற்றியும் இராஜதம்பதிகளின் விஜயத்தைப் பற்றியும் பேசத்தொடங்கினார்கள். அப்பொழுது இராஜாதான் சென்னைக்கு வருகிறாராக்குமென்று நினைத்து, ஆமட்ஆலியின் புத்திரி, அச்சமயம் தன் தகப்பனார் பதக்கத்தை அவரிடம் தானே நேரில் திருப்பிககொடுக்க வுத்தேசித்திருந்தாள். இராஜா வருகிறாரான்று அவள் கேட்டதற்கு, சென்னையிலிருந்து வந்தவளாதலால் சாமாசாரங்களெல்லாம் நன்றாயறிந்த ஷீக்ஹாஸின் மகள், இராஜா சென்னைக்கு வருகிறார் என்று யார் சொன்னார்கள்? அதெல்லாம் பொய். இராஜா சீமையிலேதானிருக்கிறார். இராஜா பிள்ளையும் அவர் தேவி இராஜாத்தியும் சென்னைக்கு விஜயமாய் வரப்போகிறார்கள். அப்பொழுது சென்னையில் நிற்கவிடங்கிடைப்பது அருமையாயிருக்கும். வர்ணக்கொடிகளும் ஆலவட்டங்களும் ஆகாயம் தெரியாது பறந்துகொண்டிருக்குமென்று இராஜதம்பதிகள் வரவைக்குறித்து வர்ணிக்கத் தொடங்கினாள். இதைக்கேட்ட 'பாடிமா' (போர்வீரன் மகள்) மௌனமாய் வீடுசென்று இரவெல்லாம் விழித்திருந்து சிந்திக்கலானாள். கடைசியில் ஒரு தீர்மானத்துக்கு வந்து, மூலையிலுள்ள உண்டிக்கலயத்தில் தான் சேர்த்துவைத்திருந்த பணமெல்லாம் எவ்வளவிருக்கென்று கொட்டியெண்ணலானாள். அது சென்னைக்கருகிலுள்ள ஒரு ரயில் ஸ்டேஷன்மட்டும் போகப் போதுமாயிருக்கக் கண்டு, அங்கிருந்து கால்நடையாகச் சென்னைக்குப் போய் இராஜா பிள்ளையையும் இராஜாத்தியையும் தான் அகத்தியம் நேரில் பார்க்கவேண்டுமென்று தீர்மானித்தாள்.

அப்படியே ரயில் ஸ்டேஷனுக்குப் போகவுள்ள 60-மயில் தூரத்தையும் காலால் நடந்துபோக்கி ரயிலேறி சென்னைக்குச் சமீபத்திலுள்ள ஒரு ஸ்டேஷனிலிறங்கி, 5-நாள் படாத பாடெல்லாம் பட்டுக் களைத்திளைத்துக் கடைசியில் சென்னை வந்து சேர்ந்தாள். அங்கே ரோட்டுகளெல்லாம் அலங்கரிக்கப்பட்டு இருபுறமும் ஜனங்கள் மொய்த்துக்கொண்டிருந்ததைப்பார்க்கச் சந்தோஷப்பட்டாள். ரோட்டின் ஒரு மூலையில் ஜனநெருக்க மத்தியில் சிறிது சந்துவிட்டிருக்கக் கண்டு அது வழியாக நுழைந்து ரோட்டுப்பக்கத்தில் முன்சென்று ராஜாப்பிள்ளை வந்துவிட்டாராவென்று விசாரித்தாள். இன்னும் சற்றுக்கெல்லாம் இப்படி வருவாரென்று சொல்லவும், தான் நல்ல சமயத்தில் வந்ததற்காகக் கடவுளைத் தொழுது அடங்கா மகிழ்ச்சியடைந்தாள். நிமிஷங்கள் ஒன்றின்பின்னொன்றாகச் சென்றன. இராஜபிருதுகளும் துருப்புகளும் அதோ வந்துவிட்டன. எல்லாரும் இராஜா பிள்ளையைப் பார்க்க வேண்டுமென்று முன்னுக்குவந்துமுட்டிக்கொண்டு கழுத்தை நீட்டிக்கொண்டு கண்கொட்டாது காத்திருந்தார்கள். "அதோ நாலு குதிரைகட்டிய வண்டி வருகிறதுபார்! அதில் இராஜ பிள்ளையும் இராஜாத்தியும் வருகிறார்கள்" என்று ஜனங்கள் சொல்லிக்கொண்டார்கள். அந்த ரோட்டின் மூலை திரும்பும்பொழுது ஜனநெருக்கம் அதிகமாகவிருந்தது. இராஜ தம்பதிகளேறியூர்ந்தரதம் மெள்ள வந்தது. அந்த ஜனநெருக்கத்தையும் மிதியலையும் கண்டு ஒரு க்ஷணநேரம் நின்றது. இதுதான் சமயம்! 'பாடிமா' (போர்வீரன் மகள்) இந்த சமயத்துக்குத்தான் காத்திருந்தாள். ஜனமிதியாலுண்டான குழப்பத்தில் இவள் மெள்ள நழுவிக்கொண்டு ரோட்டுப்பக்கத்தில் இராணுவ வீரர்கள் வரிசையையும் தாண்டிக்கொண்டுபோய் தான் நேரில் ராஜா பிள்ளை மூலமாக இராஜாவுக்கனுப்ப வேண்டுமென்று இத்தனைகாலமாக வைத்திருந்த அருமையான பதக்கத்தை காகிதத்தில் சுற்றி வைத்திருந்தபடி இராஜதம்பதிகளேறியிருந்த இரதத்தில் போய் விழும்படி எறிந்து விட்டாள். ஒரு நிமிஷத்துக்கு எல்லாம் குழப்பமாயிருந்தது. இரண்டு போலீஸ் கான்ஸ்டேபிள்கள் அவளைப் பிடித்துக்துக்கொண்டு ஏன் இங்குவந்தாயென்றுசாவத்தலைப்பட்டார்கள். அதற்குள் மேன்மைதங்கிய இளவரசியார் அக்காகிதத்தைப் பிரித்துப்பார்க்க அதில் பழமையான இராஜ கௌரதாப் பதக்கம் இருக்கக்கண்டு அதை இளவரசருக்குக்காட்டினார். இருவரும் ஏதோ சிலவார்த்தைகள் பேசிக்கொண்டார்கள். தெய்வ சங்கல்பமாய் இளவரசருக்கு அப்பதக்சத்தைப் பார்த்ததும் அது சம்பந்தமாக ஏதோ விசேஷமிருக்கிறது தெரிந்துகொள்ள வேண்டுமென்று பட்டது. பக்கநோக்கித் திரும்பினார். குதிரைமேலேறி வந்த இராணுவ உத்தியோகஸ்தர் ஒருவர் அவ்வடையாளங்கண்டு இராஜ தம்பதிகளுக்கருகே குதிரையை விட்டுக் கொண்டோடி வந்தார். ஓடிவரவும் ஏதோ ஒரு இராஜ கட்டளை பிறந்தது. அதை அவர் தலையில் வகித்தேற்றுக்கொள்ளவும் இராஜ பரிவாரங்கள் முன்போல் ஊர்கோலமாகப் பவனி சென்றன.

ஆமட் ஆலியன் (போர்வீரன்) மகள் ஊர் வந்து சேர்ந்ததும் ஊர் ஜனங்களெல்லாம் அவளைச் சூழ்ந்துகொண்டு இராஜா பிள்ளையைப் பார்த்தாயா? இராஜாத்தியைப் பார்த்தாயா? என்ன சொன்னார்கள்? என்ன நடந்தது?" என்று ஆவலாயும் அவசரமாயும் அவளை விசாரிக்கத் தலைப்பட்டார்கள். அதற்கெல்லாம் அவள் தான் இராஜா பிள்ளையையும் இராஜாத்தியையும் பார்க்க அழைத்துக்கொண்டுபோகப் பட்டதையும் அங்கே இராஜ தம்பதிகள் தன் சரித்திரத்தைச் சொல்லச்சொல்லிக் கேட்கத் தான் சொன்ன விவரத்தையும் அதன்பேரில் இராஜா பிள்ளை தன் சொந்தக்கையால் அத்தப்பதக்கத்தை இராஜா கையில் தானே நேராகக்கொடுப்பதாக ஒப்புக்கொண்டு, (ஆமட் ஆலியைப்போல்) அவ்வளவு தீரனான போர்வீரன் மகள் அவன் பென்ஷன் நின்றுபோனதால் வருந்தப்பார்ப்பது சரியல்லவென்று அவளுள்ளவரையில் அவளுடைய தகப்பனருக்குக் கிடைத்த பென்ஷன் அவளுக்கும் கிடைக்குமென்று சொல்லி சந்தோஷமாயனுப்பினதையும் சொல்லக்கேட்டு, கிராம ஜனங்கள் இராஜதம்பதிகளைப்பற்றி இன்னம் கதை கதையாகப் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.



## மஹாமஹோபாத்தியாயர் உத்தமதானபுரம் ப்ரஹ்மஸ்ரீ வே. சாமிநாதையர் அவர்கள்.

வெகுகாலம் கும்பகோணம் காலேஜ் தமிழ்ப் பண்டிதராயிருந்து இப்பொழுது சென்னை ப்ரெஸிடென்ஸி காலேஜில் தமிழ்ப் புலமை நடத்தும் ப்ரஹ்மஸ்ரீ உத்தமதானபுரம் வே சாமிநாதையரவர்களுக்கு இந்தியா கவர்ன்மென்டார் "மஹாமஹோபாத்தியாயர்" என்கிற கௌரதாப் பட்டமளித்திருக்கிறார்கள். இந்த ஆரியபூமியில் ஆசிரியத்தொழில் மிகவும் மேன்மைபெற்று விளங்கியது. ஆத்மபோதஞ்செய்யும் பரமாசிரியர் தெய்வமேயாகக் கொண்டாடப்படுகிறார்கள். வித்தியாபோதம் செய்யும் வித்தியாசிரியர் தாய் தந்தையரினும் மேலாக மதித்துக் கொண்டாடப்படுகிறார்கள். பிராணதாதாவாகிய பிதாவினும், அந்தப் பிராணனைக் கருவில் வைத்து வளர்த்த தாய்மேல். இகபரசுகானுபவங்களுக்கின்றியமையா உடம்பினை வளர்த்த தாயினும், உடலுயிரிரண்டுக்கு முறுதிபயக்கும் வித்தையைக் கொடுத்துவளர்த்த ஆசிரியர் மேலானவராம். இம்மூவர்கள் முயற்சியாலும் ஈசுவரகிருபையாலும உயிருடல் வித்தை மூன்றும் பொருந்தத் தேறிப் பழுதறப் பக்குவமான ஜீவனுக்கு ஜன்ம சாபல்யமாம் ஆத்மவித்தையை உபதேசித்து "தன்னைத் தானறிந்து"— "உடம்பினைப்பெற்ற பயனாவதெல்லாம், உடம்பினிலுத்தமனைக்காண்" என்ற ஔவையார் திருவாக்குப்படி, "உடம்பினைப்பெற்ற பயனாவதெல்லாம், திடம்பட வீசனைத் தேடு" என்றதற்கிசைய ஈசனைத் தேடத் திடமுண்டாக்கி வைத்தபின் வழிகாட்டி அருள்புரியும் பரமாசிரியர் ஈசுவரஸ்வரூபமேயாம். இப்படி ஆசிரியத்தொழில் மேம்பாடடைந்தது ஏனென்றால் எல்லா வித்தைகளிலும் மனிதனை உண்மையில் உள்ளபடியாளாக்கிவிடுவது மேலான பரமவித்தையாம். இதற்குச் சாதகமாயிருப்பவர்கள் பெருமைப் பாட்டாலன்றி மனிதன் பெருமையடையான்.

இப்படிப்பட்ட சிறந்ததொழில் இப்பொழுது காசுக்குத் தோசை விற்கும் கைம்பெண் வியாபாரமாக, ஏதோ வயிற்றுப் பிழைப்புக்காகக் கூலிக்குப் படிப்புச் சொல்லிக்கொடுக்கும் தொழிலாக மாறிவிட்டது. அப்படி மாறிவிட்டாலும் அந்தத் தொழிலிலிருந்த பூர்வந்தொட்டு அத்தொழிலுக்குள்ள மதிப்புக் குறையாமலும், எத்தாலும் வித்தையை வளர்ப்பதே வித்தியாசிரியர் கடமையாக அதனால் வரும் கஷ்ட நஷ்டங்களைப் பாராமல் வித்தியானந்தம் ஒன்றையே கருதி வித்தியாபிவிருத்திக்குழைத்துவரும் உத்தம சம்பிரதாயத்தைக் கைவிடாமலும் உழைத்து, தம்மால் தம் தொழிலுக்கும் ஒரு கௌரதை வரும்படி உள்ளபடி யுண்மையாய்ப் பாடுபட்டுழைத்துவரும் அருமை பெருமை பொருந்திய போதகாசிரியர்களில் ஒருவராயுள்ள இவருடைய பெருமையை கவர்ன்மென்டார் அங்கீகரித்து இவருக்கு அப்பட்டம் கொடுத்ததால் இவருக்கும், கவர்ன்மென்டாருக்கும், அப்பட்டத்திற்கும், தமிழ்ப்பயிற்சிக்கும் கௌரதை விர்த்தியாகலாயிற்று. சுத்தமான வைரக்கல்லைப் பட்டை தீர்ந்து வெட்டுவதால், அதன் ஒளி அதற்குள்ளே மாறி மாறிப்பட்டு விருத்தியாகி ஜ்வலிப்பதுபோல, ஸ்வபாவமாகவே மதிக்கத்தக்க வித்தையும், அதற்குரிய வித்தியாப்பட்டமும் பாத்திரமறிந்து கொடுக்கப்பட்டமையால் மேற்கூறிய பல பொருத்தங்களின் காரணத்தால் அது அதன் சுபாவத்திலும் மேலாகப் பிரகாசிக்கலாயிற்று. இதற்காக பிரம்மஸ்ரீ சாமிநாதையர் அவர்களுக்கு மட்டுமன்று; அவரைக் கௌரவப்படுத்தினதால், அவர்கள் கொடையிலுள்ள கௌரதாப்பட்டம் இன்னும் பிரகாசிக்கும்படிச் செய்த ஸர்க்காருக்கும் சந்தோஷமுகமன்கூறுகிறோம்.

# "BLACK TOWN" AND "GEORGE TOWN."

*(From the Madras Mail of 22nd January 1906.)*

"THE GOVERNMENT HAVE, IT APPEARS, BEGUN to make enquiries amongst the Native citizens of Madras, through the Commissioner of Police, as to public feeling with regard to altering the name of Black Town, the desirability of which has recently been discussed in our columns. We have reeived numerous letters on the subject, a considerable proportion of our correspondents suggesting an alteration to "Ampthill Town". But by far the best and most appropriate suggestion that we have yet met with is the one contained in a letter which we publish in another column to-day. "George Town" would not only be a graceful compliment H. R. H. the Prince of Wals and would commemorate His Royal Highness's visit to Madras in a special and permanent manner: but the name is singularly appropriate in conjunction with the Fort which is named after St. George, the Patron Saint of England. We hope that the authorities will give this happy and excellent suggestion their earlist attention."—

"Not out of myself—I have no power of myself—
But out of you who read these words
Do I write them."

["As long as you harbor motives so long are you giving hostages to the enemy—while you are a slave(to thi and that) yau can only obey. It is not You who are acting at all."—*Ed. Carpenter.*]

SIR,—Now that the authorities have taken in earnest the suggestion to discontinue the name "Black Town" and re-name that part of Madras by a more appropriate name, it is time that we put our heads together and selected a name that would stand it in good stead and also commemorate the Prince's Visit, which is the auspicious occasion for dropping an old but obnoxious name. Old names die hard and nicknames more so.

The name "Black Town" becomes an enigma to the new-comer who, landing at the Pier, gazes on the fine rows of buildings that confront him on the Beach or as he turns round Parry's Corner into the Esplanade. But the old order ever changeth, giving place to new; and names too change with the change of times and sentiments. So if "Black Town" must go to where the old order of things have gone, it must give place to a new one which will be appropriate not only to the new order that has arisen out of the old, but will also find a ready echo in the hearts and sentiments of the people now living and moving and making the town throb with life. "Should the old terms Peddunaickpett and Muthialpett be used, or could you suggest some other appropriate names" enquires Mr. Bidie, the Deputy Commissioner of Police, who has been "called on to submit a Report." Well, none of to old names would do, for the very reasons that I have above urged. Pettah means a petty straggling townlet, and with all due respect to the shades of the great Peddunaick and Muthiyalu Chetty, the present city has far outgrown the dimensions of a pettah; as it has in wealth and intellignce outgrown the petty greatness of these worthies who loomed large in the eyes of the Factors in the white settlement now known as Fort St. George. The straggling Pettahs have run into each other's embrace and grown into one dense mass of pushing humanity with a more dense and pushing mass of buildings, rows, streets and roads that run into each other like arteries and veins.

"Pearl Town" may be easy to pronounce, but has no history in it, and so cannot live. The names "The City" and "The Town" are strange drafts drawn free on the London Change and its traditions of centuries, which may find ready acceptance at the counters of English business houses on the Beach, but the Indian houses will ever fight shy of it and you can hardly bring it into current use. They smell too much of the "London House." Then what shall it be? It is no use ransacking the vocabulary for names. A real name—a name that will stick readily—must be "appropriate" *i. e.* ready "to take to one's self as one's own." To name a thing rightly is to reveal in one all comprehensive

word its present character and future unfoldment. Madras with its straggling "Pettahs" and "Pakkams" has grown now into "a city of magnificent distances". The colour of its people is no longer the distinguishing feature of its busy centre. Its character has changed with its growth. It is now a Presidency City—no longer content to be a mere provincial capital, but aspiring to be knit together with other provincial capitals to form and cherish Imperial notions and ideals. If there is one thing more striking than anything else in the midst of all the din and turmoil of contending parties and counteracting forces and aspirations, it is the drawing together in closer bonds of personal love and esteem of Royalty as represented by Queen Victoria and her descendants and the people. Our first Empress has been to us more a loving Mother than merely a reigning Queen. Her mother-heart overflowing with love for her children has sketched in a few simple but inspired words the great ideal which the rulers and the ruled should aspire to realise. While she has infused hope and love and noble aspirations in our breasts, she has taken care to infuse her great love for India in the hearts of her children who are to succeed her in ruling us. It was no mere exchange of compliments that the Prince of Wales and the Lieutenant-Governor of Bengal indulged at on the occasion of the laying of the foundation stone of the Victoria National Memorial at Calcutta. If the Prince has inherited his love of India from Queen Victoria, he has in full measure also inherited the love of the people of India for their sovereign Mother.

Two months of the Prince's tour in India have fully confirmed what has all along been felt at heart, but never fully expressed. If Queen Victoria wiped a nation's tears and hugged them close to her mother heart in enfolding love at a time of great distress and national crisis in their history, what more appropriate for a Royal Prince of her blood, who has inherited both her love for India and India's love for her, to do than to wipe the vestiges of an old stigma in a name that had its birth in the dark days of ignorance, passion and prejudice, by his own Royal name. I see that the Prince of Wales signs his name "George P". So, he will one day become "George R. and I." What name shall be more appropriate both of the occasion and the inherited traditions on either side of the past, than that of "George Town." The City Fathers who will be the first to welcome Their Royal Highnesses on their landing should ask His Royal Highness to wipe "Black Town" off the face of the city, that is shining bright aglow with love and enthusiasm to greet him, their future Emperor, on his first arrival with his Royal Consort into this the first and earliest settlement of his race in India. I would suggest that the name "George Town" should be worked in gold in a red field, with the Prince's Royal shield and motto, and the Flag offered to the Prince to be presented to the City. It may be set up on the top of the Deputy Commissioner's Office buildings and will fly there during T. R. H.'s visit. Thus "Black Town" will die a natural death, and from its ashes will rise Phœnix-like by the magic touch of the Prince's lips the new and glorious "George Town" which will be a living memento, as long as name and form last, of the loved and loving Prince whose loving visit to our City we are all so jubilantly waiting to see.

His Royal Highness, by his gracious consent to rechristen "Black Town" after his own dear name, will become the Patron Prince of the busiest centre of Madras, and as such will erect for himself a temple in the hearts of the busy people outside the Fort, as the Patron Saint of England has dedicated to him the Fort which goes by his name. "Long Live Our Patron Prince." I hear the enthusiastic crowd on the roads and the galleries greeting the Royal procession as it slowly wends its way through the once stigmatised but now glorified "George Town"—but I anticipate with my quick imagination what my senses should wait to realise till the Prince's arrival and procession.

C. V. SWAMINATHA IYER.

Anandashrama, Triplicane, 20th Jan.

"The riddle has been before the public all these days but no one has hit at the solution of it as happily and as appropriately as you have done...... Madrasis owe a debt of gratitude to you"— represents in a typical way the general outburst of approbation and spontaniety of sentiment the happy suggestion has evoked throughout the Presidency.